உ

சாப்டூரென்று பெயர் விளங்கிய
மருதூர் மஹாராஜா அவர்களாகிய
மாட்சிமைதங்கிய நாகயசாமிக் காமயநாயக்கரவர்கள்மீது
திருமங்கலந்தாலூகா பேரையூர் சமஸ்தான வித்துவான்
ஸோடஸாவதானம்
பொன்னுங்கூடக்கவிராயரவர்களியற்றிய

# பூதரவிலாசமும்

## நாணிக்கண்புதைக்கவருந்தலும் வண்டோச்சிமருங்கணைதலும் பற்றிய ஒருதுறைக்கோவைகளும்.

இவை

௸ மருதூர்ச் சமஸ்தானபதியாகிய மஹாராஜா
ஸ்ரீமான் சதுரகிரிக்கட்டாரிநாகயகாமராஜேந்திர
ராமசாமிக்காமயநாயக்கரவர்கள் விரும்பிய வண்ணம்

௸ பேரையூர் சமஸ்தான வித்துவான்
அஷ்டாவதானம்
**போ. மீ. இராமலிங்கக் கவிராயரால்**
பரிசோதித்து

மதுரை, ஹரிஸமய திவாகர முத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றன.

7—5—1934
[illegible] சித்திரை-மீ 25-உ
[illegible] காபிரைட் ரிஜிஸ்டர்டு.

உ

சாப்டுரென்று பெயர் விளங்கிய மருதூர் ஜமீந்தார்
மாட்சிமைதங்கிய நாகயசாமிக் காமயநாயக்கரவர்கள்மீது

திருமங்கலந்தாலூகா பேரையூர் சமஸ்தான வித்துவான்
ஸோடஸாவதானம்
பொன்னுங்கூடக்கவிராயரவர்களியற்றிய

# பூதரவிலாசமும்

## நாணிக்கண்புதைக்கவருந்தலும்
## வண்டோச்சிமருங்கணைதலும் பற்றிய
## ஒருதுறைக்கோவைகளும்.

இவை

ஷை மருதூர்ச் சமஸ்தானபதியாகிய
ஸ்ரீமான் சதுரகிரிக்கட்டாரிநாகயகாமராஜேந்திர
ராமசாமிக்காமயநாயக்கரவர்கள் விரும்பிய வண்ணம்

ஷை பேரையூர் சமஸ்தான வித்துவான்
அஷ்டாவதானம்

**பொ. மீ. இராமலிங்கக் கவிராயரால்**
பரிசோதித்து

மதுரை, ஹிஸ்மய திவாகர முத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றன.
7—5—1934
ஸ்ரீபவ-ஞ சித்திரை-மீ 25-உ
காப்பி ரைட் ரிஜிஸ்டர்டு.



உ

சிவமயம்.

சண்முகநாதன் துணை.

# முகவுரை.

---

அமிழ்தினுமினிய தமிழ்நலங்கெழுமிய இத்தகைய நூல்களை ஆக்கியவர், சோடசாவதானம் போன்னுங்[illegible]க்கவிராயரவர்கள். இவர், பல்வளம்பழுநியபாண்டிநாட்டின்றிலகம் போன்றபேரையூரில், வைசியகுலத்திற்சோழியவகுப்பில், புழுகுகறுப்பணன்செட்டியார்அவர்கள்குமாரராகத்தோன்றி, ௸ பேரையூர்ச்சமஸ்தானவித்துவானாகவிருந்தவொருவராவர். ௸ சமஸ்தானத்துவித்துவானாகவிருந்து, சமீபகாலங்கட்குமுன்புபுகழுடம்புபெற்ற, அஷ்டாவதானம் பொ. மீனாட்சிசுந்தரக்கவிராயரவர்களுக்குத்தந்தையும்எனக்குமூதாதையுமாவர். ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னுனான்குவகைப்பாக்களையதிவிரைவிற்பாடுந்தகைமைபூண்ட, இப்புலவர்பெருமானாரியற்றியஇப்பிரபந்தங்களினருமைபெருமையும், பொருட்செறிவுஞ், சொற்சுவையும், பதங்களின்சேர்க்கையும், ஒளிதருந்திட்பமும், பரம்பரையின்றன்மையும், இந்நூல்களுக்குதவியுள்ளசங்கவித்துவான்களின் சாற்றுக்கவிக்கூற்றானே! நன்குவிளங்கும்.

யாப்பிலக்கணவிதிவழாது, செய்யுளியல்பிற்பாடும்பிரபந்தங்கள்தொண்ணூற்றாறுவகைப்படும். அவற்றுளகப்பொருட்டுறையிலமைத்துக்கூறுவதுகோவையெனப்படும். அக்கோவையிலமைந்துள்ளபற்பலதுறைகளிற்றலைவனிடத்து, வேட்கை

மிக்கதலைவி, மருட்சியெய்தித்தன்முற்பட்டதொருபொருளை நோக்கித்தன்னிலைமையைக்கூறுவதாக, அமைத்துப்பாடப் பெறுவதே, விலாசமெனப்படும்.

மேற்கூறியதுறைகளில்தலைவனைத்திடீரென்றுபுதிதாகப் பார்த்ததலைவி, நாணமுற்றுக்கண்புதைக்க, அதையறிந்த தலைவன்வருந்திக்கண்ணைத்திறந்தருட்கண்ணுக்குமாறுகூறு வதாகவமைத்துப்பாடப்பெறுவதுநாணிக்கண்புதைக்கவருந்த லென்னுந்துறையென்றும், தலைவியினதுகூந்தலின்கணுள்ள பூங்கொத்துகளினிறைந்தசுரும்பினங்களின்சுமையைத்தாங்க லாற்றாது, வருந்தியஇடையினிலைமையையறிந்ததலைவனிரக் கமுற்றுவண்டினங்கட்கிடையினிலைமையையோதி, ஓச்சுவ தாகவமைத்துப்பாடப்பெறுவது, வண்டோச்சிமருங்கணைத லென்னுந்துறையென்றும்வழங்கப்பெறும்.

சமுத்திரத்தைநோக்கிக்கூறுவதுசமுத்திரவிலாசமென் றும், சந்திரனைநோக்கிக்கூறுவதுசந்திரவிலாசமென்றும், நதி யைநோக்கிக்கூறுவதுநதிவிலாசமென்றும் வழங்கப்பெற்றாற் போல, இப்பூதரவிலாசமென்பது, சாப்டூரென்றுபெயர்விளங் கியமருதூர்ச்சமத்தானபதியும், பெருங்கொடைப்பிரபுவும், அருந்தமிழ்ப்பெரும்புலவர்குழாங்களையாதரித்து வந்தவரும், செங்கோன்முறைவழாதரசுபுரிந்துவந்தவருமான மகா-௱-ஸ்ரீ ராஜமான்ய மஹாராஜா அவர்களாகிய ஸ்ரீ நாகயசாமிக் காமய நாயக்கரவர்கள் மீது சுமார் 55 வருஷங்களுக்குமுன்னரே பாடி அரங்கேற்றப்பெற்றது. நூறுகவிகளையுடையது (காப்புச் செய்யுள் ஒன்று) அநேக சிலேடைகளும் அடி முதல் இடை கடை மடக்குகளும், சந்தவின்பமுநிறைந்து, நூலாசிரியரது கல்வித்திறமையைவிளக்கிக்காட்டும்வண்ணம் அமைந்திருக்

கின்றது. இது பாட்டுடைத்தலைவன தசதுரகிரியென்னு மியற்பெயரையுடையபூதரத்தைநோக்கிக்கூறினமையாற்பூதர விலாசமெனப்பெயர்பெற்றதாயிற்று.

நாணிக்கண்புதைக்கவருந்தலென்னுந்துறையுள்செய்யுள் நூறு வண்டோச்சிமருங்கணைதலென்னுந்துறையுள்செய்யுள் நூறு (காப்புச் செய்யுள் ஒன்று) வாழிச்செய்யுள் ஒன்று இவைகளுஞ்செல்லச்செல்லப்பொருட்செறிவுஞ்சொற்பொழி வுநிறைந்துகலித்துறைப்பாவிலிரண்டுபொருள்தோன்றும்படி யாய்மேற்கூறியபாட்டுடைத்தலைவன்மீதுசுமார் 50 வருஷங்க ளுக்குமுன்னரேபாடியரங்கேற்றுச்செய்யாதுநின்றுவிட்டன.

ஷை பாட்டுடைத்தலைவரது பௌத்திரரும் ஷை மரு தூரைஅரசாட்சிசெய்தமஹாராஜா அவர்களாகிய மகா-௱-ஸ்ரீ சதுரகிரிக்கட்டாரிராமசாமிக்காமயநாயக்கரவர்களின், வர புத்திரருமாகவிளங்கி இப்போது அரசுசெலுத்திவரும் **மகா-௱-௱-ஸ்ரீ மாட்சிமைதங்கிய சதுரகிரிக்கட்டாரிநாகய காமராஜேந்திரராமசாமிக்காமயநாயக்கரவர்கள்** இரண்டுமாதங் களுக்குமுன்னர் என்னையழைத்து மேற்கூறியபூதரவிலாச மென்னுநூலினேட்டுப்பிரதியொன்று தம்மிடத்திலிருப்ப தாகவும், அதிற்சிலபாகங்கள்மட்டுமேயுள்ளனவென்றுஞ் சொல்லிதங்கள்வீட்டேட்டுப்பிரதிகளைச்சோதித்து, இப்பூதர விலாசநூலின்முழுப்பிரதிகளைப்பார்த்துத்தேடித்தரவேண்டு மென்றும் உத்தரவுசெய்தார்கள்.

அவ்வுத்தரவை யான் மறுக்கலாற்றுதவனனபடியாலும், என்முன்னோர்களின்கீர்த்தியைவெளிப்பரவச்செய்வதெனது பணியாகலானு, நான்றேடிப்பார்க்குங்காலத்தில்மேற்படிபூதர

விலாசம்முழுப்பிரதியும், மேற்கூறியஇரண்டுகோவைத்துறைகளுங்கிடைத்தன. அவைகளைமேற்படி ராஜசமூகத்திற்சேர்ப்பிக்க மஹாராஜா அவர்கள்கோவையிணுணிக்கண்புதைக்கவருந்தலென்னுந்துறையின் முதற்செய்யுளின்மூலமாக இப்பூதர விலாசமுன்னமேயரங்கேற்றுச்செய்திருந்தாலும், இப்போது தம்சபையில் முதலில் கோவைத்துறைகளையும் பின்பு பூதர விலாசத்தையும்அரங்கேற்றுமாறுவுத்தரவுபுரிந்தார்கள் அதன்படி சென்ற 1932ளு டிசம்பர்மீ 21உக்குச்சரியான தமிழ் ஆங்கிரஸஹுமார்கழிமீ 7உபுதன்கிழமைமுதல் 29-12-1932 ஆங்கிரஸஹு மார்கழிமீ 15உ வியாழக்கிழமை வரை கோவைதுறைகளும், 1932ஹு டிசம்பர்மீ 30உக்குத் தமிழ் ஆங்கிரஸஹு மார்கழிமீ 16உ வெள்ளிக்கிழமை முதல் 4-1-1933 ஆங்கிரஸஹு மார்கழிமீ 21உ புதன்கிழமைவரை பூதரவிலாசமும், கோவைதுறைகளுக்கு வாழிச்செய்யுள் தென்படாமையாலதற்குக்கலித்துறைப்பாவில் ஒருசெய்யுள் இயற்றியதையுஞ்சேர்த்துஅரங்கேற்றிமுடிவுபெற்றன.

உடனே மேற்படி மஹாராஜா அவர்கள் பெருமகிழ்ச்சியெய்தி ஆனந்தபாஸ்பம் பொழிந்து இவைகளை இப்பொழுதே அச்சிடவேண்டுமென்றும்' அது தனது கடமையென்றும் வேண்டியபொருளுதவிசெய்து திவிரமுயற்சியெடுத்துக்கொள்ளும்படி தூண்டியதின்பேரில் மேற்படி நூல்களைச் சுத்தப்பிரதியாகக்காகிதத்திலெழுதியச்சிலிடுவிக்க இம்முகவுரையையெழுதமுன்வந்தேன்.

இம் மருதூர் மஹாராஜா அவர்கள் தாம் அதிபால்ய திசையிலிருப்பினும், தமது அருமைப் பிதாவும், மூதாதையும் சிறந்தவொப்பற்ற தமிழ்வித்துவானுகவிருந்தமையாலும்'

மகனறிவு தந்தையறிவென்னும் ஆன்றோர் வாக்கின்படி தாமும்அருங்கலைவிநோதராகவிருந்து, தமிழ்வித்துவகுல பரிபாலகராகி என்முன்னோர்களைத்தன்முன்னோர்கள் பரம்பரையாயாதரித்துவந்ததுபோல என்னையும் நன்காதரித்து என்னை அஷ்டாவதானஞ் செய்யும்படி சொல்லி தமது சமஸ்தானத்திற்செய்யப்பார்த்து வேண்டிய பூஷணாதிகளும் சதாவதானி யென்னும் பட்டமும், நன்செய் முதலிய வழக்கப்படியுள்ள சாசனங்களுங் கொடுத்து ஆதரித்துவருதல் இத்தமிழ்நாட்டுக்கே ஒரு பெருஞ் சிறப்பாகுமென்பதிலையமில்லை.

தமிழ் விருத்தியடையும்படிபரிபாலிக்கும் **ஸ்ரீமான் மாட்சிமைதங்கிய நமது மருதூர் மஹாராஜா அவர்களாகிய சதுரகிரிக்கட்டாரிநாகயகாமராஜேந்திரராமசாமிக்காமயநாயக்கரவர்கள்** பல்லாண்டுகாலம் பெருமகிழ்ச்சியுடன்வாழ்ந்திருந்து அநேக பிரபந்தங்களையேற்றுப்புத்திரப்பேறுபெற்றுப்பெரும் புகழடையும்வண்ணம் பரமதயாநிதியாகிய ஸ்ரீ சதுரகிரி மஹாலிங்கேசர்திருவடித்தாமரைமலர்களைச்சிந்திக்கின்றேன்.

இங்ஙனம்,

**பொ. மீ. இராமலிங்கக்கவிராயர்**

சமஸ்தான வித்துவான்

அஷ்டாவதானி

**பேரையூர்.**

5—1—1933.

ஆங்கிரஸவரு மார்கழிமீ 22உ குருவாரம்.

---

உ

சண்முகநாதன் துணை.

# சாற்றுக்கவிகள்.

---

சேற்றூர் சமஸ்தான வித்துவானும்
மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவானுமாகிய
மகா-ள-ள-ஸ்ரீ
மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள்
இயற்றியவை.

ஆதரவார் மருதூர்நா கயசாமிக் காமயனு
மண்ணால் சொந்தப்
பூதரமா கியசதுரா சலவிலா சம்பாடிப்
புலவ ரெல்லா
மீதரச ருளமகிழு நவரசமுற் றிடுமமுதென்
றினிதேற் பச்சும்
மாதரனுற் றான்பேரை நகர்ப்பொன்னுங் கூடனு
வலவன் றானே.

இதைத்தவிர *விடையூறு கிளத்தலெனுந் துறைநூறு
மெதிர்நா ணிக்கண்
புதைத்தலெனுந் துறைநூறுங் கலித்துறையிற் பாடிமிகப்
புகழ்பெற் றான்மன்
பதைத்தொகுதி மகிழுமிம்முப் பிரபந்தங் களையுமச்சிற்
பதித்தார் தோறும்
விதைத்தனனன் னவன்பேர னிராமலிங்க நாமதமிழ்
வித்து வானே.

---

* இடையூறு கிளத்தல்—வண்டோச்சிமருங்கணைதல்.

மதுரை திருஞானசம்மந்தமூர்த்திகளாதீன வித்துவான்

பிரம்மஸ்ரீ மு. கோவிந்தசாமி அய்யரவர்கள்

இயற்றியவை.

பூமலர் முகத்தான் புயனிகர் கரத்தான்
புவிப்புரை யிலங்குயர் தோளா
னாமல ரினிய வாய்மையா னுய்ந்த
நற்றமிழ்ப் புலவர்கூட் டுடையான்
காமலி மருதூர் நாகய சாமிக்
காமய நாயகன் றன்னைப்
பாமலி தில்லை னென்னவே கொண்டு
பகருநா னூறெனுந் துறையுள்

பூணணி முலையாள் விரகினாற் புகலும்
பூதர விலாசமாந் துறையு
நாணமே யிட்டான் மலர்விழி புதைக்க
நாயகன் வருந்துமத் துறையும்
பானுறு மறுகா லோச்சியே மருங்கு
பற்றுமத் துறையையுந் தமிழாற்
காணருஞ் சொல்லோ டரும்பொருட் சுவைகள்
கமழ்தரக் கழறின னினிதே.

கழருமந் நூலின் சுவையமு தருந்திக்
கல்மக ணிமெய் வெறுத்தா
டழல்விழி யாதி சேடனு மய்ப்பா
தாளமே யடைந்தனன் மறைந்து

அழகிய தமிழ்தேர் முனிவன்மெய் குறுகி
யகமுடைந் தடைந்தனன் மலைவா
யெழிலமை யிந்நூற் பெருமையை யுரைக்க
வெம்மனோர்க் கெளியது வாமோ.

இத்தகு பெருமை யுடையவன் யாவ
னென்றிடிற் பேரையூர் வணிகன்
சித்திர முதலா நால்வகைக் கவியுஞ்
செப்பிடு மாற்றன்மிக் குடையா
னித்தரை புகழெண் ணிரண்டவ தானி
யிறைவர்பாற் பரிசுகள் பெற்றோன்
முத்தமிழ்ப் பொன் னுங் கூட னுங் கவிகள்
முதல்வனற் பாவல ரேறே.

---

## மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலை ஆசிரியர்
## மகா-௱-௱-ஸ்ரீ சு. நல்லசிவன் பிள்ளையவர்கள்
## இயற்றியவை.

கற்றவர்கண் மணியனையான் பொன் னுங் கூடக்
கவிராயன் பேரையூர் கருதி வாழ்வோன்
கொற்றமிகு மீரெட்டா மவதா னத்தன்
குபேரனக ரெனும்பேரைச் சமத்தா னத்தி
னற்றமிழ்வித் வான்கவிநால் வல்லோன் முந்நீர்
ஞாலமதித் திடுபுகழ்சொன் னயவாக் கோன்பேர்
முற்றறிவன் றாள்பரவும் பத்தி மிக்கோன்
முத்தமிழ்விற் பனனிவன்சீர் மொழிதற் பாற்றோ.

இன்னபுல வோன்மருதூர்ச் சமீந்தா ரான
 விசைமிகுநா கயசாமிக் காமயநா யக்க
ரென்னுமுகி னேர்கொடையான் மீதி லுள்ள
 மிசைத்திசைத்த பூதரவி லாச மின்பார்
மன்னுபொரு ணிறைநாணிக் கண்பு தைத்தல்
 வண்டோச்சி மருங்கணைத லெனுமிந் நூல்கள்
பன்னயமுஞ் செறிந்ததமை யாக்கி யோன்றன்
 பகர்புலமை காட்டுதருப் பணமென் பாமே.

---

சேற்றூர்சமஸ்தானவித்துவானும் பேரையூர் மகா-ா-ா-ஸ்ரீ மஹாராஜாஅவர்களாகிய கருத்தப்பாண்டியரேன்ற முத்துவிஜயரேகுநாதகோமேடிமுடித்தம்பயசாமிதும்பிச்சி நாயக்கரவர்கள் மாணுக்கருளொருவருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ அப்பாவுக்கவிராயரவர்களால் இயற்றியவை.

அன்னங்கள் வண்டுறையு லாவப் புதுமலரி
னின்னங்கள் வண்டுறையு மேர்மருதூர் — மன்ன
ஒருகுடையா னண்டகைமா வோங்கன்முல்லை மாலை
முருகுடையா னண்டகைக்கொண் மூ.

முனந்தருவை யங்காக்கு மொய்துளாய் மார்பர்க்
குனந்தருவை யங்காக்கு மோங்க — தினந்தருமஞ்
செய்துவந்த பாவலர்க்குச் செம்பொனரு ளுகயவேட்
கைதுவந்த செல்வியபா வால்,

பூதரவி லாசமொன்று புத்தே ளமுதென்ன
வோதியரங் கேற்றிக்கற் றோருவக்க—மேதகுசெம்
பொன்னியனுணிக்கண்புதைத்தலொன் றுஞ் சொல்வளஞ்சேர்
மன்னியவண் டோச்சி மருங்கும்.

நவதானி யம்பெருகி நல்வளஞ்சேர் பேரை
யவதானி பொன் னுங்கூ டப்பேர்க்—கவிவலவன்
மேதையர்கொண் டாட வியனுலகு கொண்டாடத்
தாதைதன்று தைக்கிசைத்த தாம்.

இன்னதுறை நூலை யினிதாய்ப் புவிபுரக்கும்
பொன்னதுறை மார்பன் புவிப்பொறையா—னன்னர்
மதிமுகத்தா னுளு மகியதனை நன்னூல்
விதிமுகத்தா னுளுமத வேள்.

பொற்பனவான் கற்பகத்தைப் போலுங் கொடைக்கரத்தான்
விற்பனவான் கற்பகத்து மெய்யுடையான்—பொற்பு
மருமாலை மார்பன் வனச மகளார்
திருமாலை நேரிந் திரன்.

இசையெனுந்தூ தேவி யிரவலர்க்கூய்ச் செம்பொ
னசையறத்தந் துன்மகிழ்சங் ரா மன்—திசைபுகழு
நன்னு கயகாம ராசேந் திரசெயபூ
மன்னு கயனென்னு மால்.

பாமலிந்த வட்டாவ தானம்பண் பாவிசைக்கும்
ராமலிங்க நாவலவ னுன்மருதூர்ப்—பூமலிதன்
கோயின்முன்பு சிங்காரக் கொட்டகையிற் கற்றறிந்தோ
ரேயநல்ல வைக்களத்தி னே.

ஆயிரத்துத் தொள்ளா யிரத்தொடுமுப் பத்திரண்டி
னேய டிசம்பராங் கிரசத்திற்—றாயரவி
வில்லேறு மாமதிக்கண் மேதக்க கேள்விதன்னி
னல்லேறு போல்வார் நயக்க.

அரங்கேற்றுச் செய்வித் தகமகிழ்ந்தேற் றுச்சித்
திரங்குலவு பொன்வத் திரமுஞ்—சரங்குலவு
பொற்பணிய கற்பணியும் பொற்பணியும் வெற்பணியுஞ்
செற்பணியச் செய்தானேர்ந் தே.

இக்கோவை யிக்கோ வினியபா கோவென்ன
விக்கோவை யேற்ற வெழின்மதனு—மிக்கோவைப்
போற்றுரு முண்டோவிப் பூதலமாந் தாரணியின்
மேற்றுரு வென்னவின்று வேன்.

---

கூத்திபாறை யென்னு நல்லூர்

மகா-ா-ஸ்ரீ முத்துகிருஷ்ண மதுரகவிராமா நுஜ
தமிழ்ப்பண்டிதரவர்கள் இயற்றியது.

பூமகள் சென்னி மணிமுடி யனைய
பூதர விலாசங்கண் புதைத்தல்
கோமலர் நிகர்வண் டோச்சுபு மருங்கு
கூடன்முந் நாலெனக் குறிப்பக்
காமரு மருதூர் நாகய சாமிக்
காமய நாயகேந் திரன்மேற்
சோமனி னவதா னன்பொன்னுங் கூடக்
தூக்குவல் லோனிசைத் தனனே.

---

## இதுவும் ஷெயாரியற்றிய

## அக்கரச்சுதகம்.

சீர்பெறு நாமஞ் சீரிய னுதி
சேடன்மே லோரவ ரொருமை
யோர்தரு நான்க னெழுத்தினு மந்நான்
குய்த்துநோக் கினர்க்கிவை யுதவு
நேர்தர வுரைத்தே னதுவுமொன் ருக
நினைக்கினந் நாமநான் கைந்தாங்
கார்மலி மருதூர் நாகய சாமிக்
காமய நாயகேந் திரனே.

---

## ஷெயார் குமாரர்

## மகா-ள-ள-ஸ்ரீ யதிராஜனுர் இயற்றியது.

பூதர விலாச நாணிக்கண் புதைத்தல்
பூமது மாந்தும் வண்டோச்சி
யாதர முடனே மருங்கணை குதலென்
ருகுமுந் நூலினை மருதூர்ச்
சிதர னனைய நாகய சாமிச்
செய்யகா மயநரேந் திரன்மேற்
கோதர மனநாட் டவர்மதன் பொன்னுங்
கூடரு வலனிழைத் தனனே.

---

வாடிமிட்டாஜமீன் கல்போத
மகா-ா-ா-ஸ்ரீ மச்சுவீட்டுசாமி யென்ற
சுந்தரபாலகுமாரசுவாமி மணியகாரரவர்கள்
இயற்றியது.

திருமருவு மருதுரை யாண்ட வேந்தன்
ஜெகமகிழு மகராஜ ராஜ யோகன்
றிண்டிறல்சேர் நாகயகா மயன்றன் பேரிற்
சிறந்தவளப் பேரைநகர் வாழ்ந்தோன் கும்பற்
பொருவுதமி ழவதானி பொன்னுங் கூடப்
புலவர்பிரான் பூதரவி லாச மொன்று
புகன்றதற்பி னுணிக்கண் புதைத்த லோடு
புனைவண்டோச் சிமருங்கும் புகன்றுவைத்தா
னருமையொடு பெருமைமிக மேன்மே லோங்கு
மவற்றைப்பாட் டுடைத்தவ்வ னன்புப் பேர
ளுகியகட் டாரிக்கா மயவே ளிதி
யவைக்களத்தி லிந்நாலா சிரியன் பேரன்
கருணையுள வவதானி ராம லிங்கக்
கவிஞனரங் கேற்றதனைக் காதாற் கேட்டுக்
கலைமுனிவ னிவற்றினிகர் காண்பா னெண்ணிக்
கருகியுள மலைவாய்ச்சங் கடமுற் றனே.

சாற்றுக்கவிகள் முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# பூதரவிலாசம்.



## காப்பு.

திருமரு தூரிற் செங்கோல் செலுத்துமா லரசர் கோமான்
கருமரு நிகராய் வந்த சாதனா கயவேண் மீதி
லிருமரு தாடு சென்றேற் கெழின்மரு மகனெண் ணுரைப்
பொருமருப் பொன்ற னன்பிற் பூதர விலாசஞ் சொல்வாம்.

## நூல்.

### பாட்டுடைத்தலைவன் சிறப்பு.

சீர்துலங்கிய போசனிங்கித
சிதரன் கரு ணாகரன்
செஞ்சொல் வாசக மங்களாகர
செல்வ னென சௌந்தரன்
வார்துலங்கிய கொங்கைமங்கையர்கள்
மார னென்றுதுதி செய்யவே
வந்த கம்பளகு லாதிபன்பெருகி
மாமதம் பொழியும் யானையான்
தார்துலங்கிய புயாசலன்புகழு
தாரவா னதிகவாரவான்
தானுவான கயி லாசநாதரிரு
தாடுதிக்குமதி நேமவான்
ஏர்துலங்கமனு நீதியுஞ்செயமு
மெண்ணியேவரு மானவா
னெங்க ளைகயசு வாமிராசதுரை
யென்று மம்புவி வளர்ப்ப னே. (க)

வண்டு லாவிவரு வண்டுளாயிநறு
மாலையே புனையு மாலை யே
வந்தனங்கள்செய வந்தசம்பிரம
மதியினுன் வதன மதியினுன்
கொண்ட லுஞ்சடைவு கொண்டலுக்கவருள்
கொடையினு னிழல்செய் குடையினுன்
குஞ்சரப் பவனி வருபிரான்விலை
குஞ்சரப் பணியி னணியினுன்
கண்டு கண்டுமன நாணுமின்வசன
காண்டிபன் சுகுண பாண்டியன்
கனதனம்பெறு மினர்விரும்புதுரை
கனதனம் பெருகு பேரனுந்
தண்டமிழ்க்குதவு தண்டிகைத்துரையு
தாரசர்ச்சனர்கள் சபையினுன்
சரச நாகய சுவாமிகாமய
தனஞ்செயன் புகழ்வளர்ப்பனே. (உ)

இதுவுமது.

தந்தியா னரிய புந்தியான் விரைசெய்

தாரி னைம்மரு தாரினன்

றந்து மன்னர்திறை தந்துவந்துபணி

தாளினன் வயிர வாளினன்

விந்தையா னினிய சிந்தையான் வரிவில்

வெற்றியான் மருவு பெற்றியான்

மேன்மையா னிகரில் பான்மையா னுலகின்

மெய்யினை னுதவு கையினன்

செந்திலா னிருப தந்தியா னனெழில்

சிதரான் சதுர பூதரான்

தென்னவன் விசைய னன்னவன் சுகுண

சீலவா னரிய பாலவான்

மந்திரன் பெரிய தந்திரன் சகல

வரிசையான் கனக புரிசையான்

வள்ள லுகைய சுவாமி காமய

வரோதயன்புவி வளர்ப்பனே. (௯)

## வேறு.

### இதுவுமது.

வல்ல வல்லைக் கொண்டம்மன்
　மாலைத் தெய்வ மழகர்பச்சை
　மலையான் கயிலை வரைநாதன்
　மலர்த்தாள் வணங்குங் காதலமு
நல்ல சதுர மால்வரையு
　நவிலும் பெரிய கவுண்டினிய
　நதியும் வளஞ்சேர் முட்டகநன்
　னூடு மருதா ருங்கமமு
முல்லை யணியுங் குந்திலிப் பேர்
　முழங்கும் பரியு மதகரியும்
　முரசும் வெண்பக் கரைடாலு
　முதற்செங் கோலு மெட்டெழுத்துஞ்
சொல்லு நெடுமால் கோத்திரமுந்
　துலங்கும் பால வார்குலமுந்
　தோன்றப் படைத்த ஙாகயவுத்
　துங்கன் வாழ்வு தழைத்திடுமே. (௪)

## இந்நூலின் வரலாறு.

### பாட்டுடைத் தலைவனுக்கும் தலைவிக்குஞ் சிலேடை.

சகல கலைக ளோதி நல்ல
தனமும் படைத்து வார முற்றுச்
சாருங் கிளைக ளொடும்ப மகிக்
கருங்கற் பேந்திச் சந்த னத்தைப்
புகழ வணிந்து தார ணியும்
புயத்திற் றுங்கிப் பெருகுவளை
பூண்டு களப மேலிவர்ந்து
பொன்னு டென்ன மணிமாடந்
திகழு மருதூர் தனைப்பு ரக்குஞ்
சிம்மா தனபூ பதியான
செயநா கயகா மயசுமுக
சிமான் போலும் வடிவு கொண்டு
மகிழ்சிங் கார வல்லி யெனு
மடந்தை யரசன் பவனி கண்டு
மையல் படைத்துத் தென் சதுர
வரையைப் பார்த்துச் சொல்வாளே. (ரு)

பாட்டுடைத் தலைவன் பவனிக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

அருங் கவிகை தனைவிரிக்க
அடர்ந்து கொடிகள் சுருட்டிவர
அரிய பரிவா ரமுநெ ருங்க
அங்கே கனமு முரசொலியுந்
தாருந் துலங்கக் கோமான்கள்
சங்கம் பலவு முடன்சேர்ந்து
தனக்கு நவரு மிகச்சூழ்ந்து
சார்ந்து கயமே யுலவியதாற்
சீருங் கனமும் பெறுமருதூர்ச்
சீமான் புகழ்நா கய்யதுரைச்
செல்வன் பவனி போலுமெதிர்
தெரிந்தா யுயர்ந்த பூதரமே
வாரும் பணியுந் தரித்தாய் நீ
வாரும் பணியுந் தரியேனுன்
மகித்து மயலைச் சொல்வேன்சம்
மதித்துக் களித்துக் கேட்பாயே. (க)

## தலைவிக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

கலையும் பணிசேர் கந்தரமுங்
கருதுங் குழையுஞ் சந்தனமுங்
கனமு மினமு மெவ்வனமுங்
கலந்து மேவப் பெற்றாய் நீ
கலையும் பணிசேர் கந்தரமுங்
கருதுங் குழையுஞ் சந்தனமுங்
கனமு மினமு மெவ்வனமுங்
கலந்து மேவப் பெற்றே னான்
கலையும் பணியுங் கற்றணிந்த
கனவான் புகழ்நா கய்யதுரைக்
காவ லதனைக் கொண்டே னான்
காவ லதனைக் கொண்டாய் நீ
மலையே யுயர்ந்த பூதரமே
மதிக்கி னீயு நானு மொன்றாம்
மானே தேனே கானகமே
மயிலே தயவாய்க் கேட்பீரே. (ஏ)

## கடைமடக்கு.

மலையைக் காட்டு மம்புயத்தான்
வதனங் காட்டு மம்புயத்தான்
மழையைக் காட்டு மங்கையினன்
மருமங் காட்டு மங்கையினன்
கலையைக் காட்டும் புத்தியினன்
கவிஞர் தாகம் புத்தியினன்
கனத்தைக் காட்டந் தரங்கத்தினன்
கழலைப் போற்றந் தரங்கத்தினன்
நிலையைக் காட்டு மாதனத்தான்
நிறங்காட் டியசிம் மாதனத்தான்
நிசத்தைக் காட்டும் வசனத்தினன்
நிதமு மமுத வசனத்தினன்
முலையைக் காட்டுந் தாரணியன்
முழுதுங் காக்குந் தாரணியன்
முகினு கயவே ளாதரமே
முற்றும் படைத்தேன் பூதரமே. (அ)

## கடைமடக்கு.

மதவா ரணம்வா வென்றவனும்
வந்து கராவை வென்றவனும்
மணிமா மகுடந் தரித்தவனும்
வாணர் தமையா தரித்தவனும்
நிதமால் பதத்தைத் துதித்தவனும்
நிருப னெனவந் துதித்தவனும்
நிலைத்த புகழும் படைத்தவனும்
நெடிய கடலம் படைத்தவனும்
பதமா சரியப் பாத்திரனும்
பண்பா கியசற் பாத்திரனும்
பருவ மதன்போற் சுந்தரனும்
பலசாத் திரம்பே சுந்தரனும்
முதல்சே ரளகா புரியானும்
மூடர்க் கன்பு புரியானும்
முகினு கய்ய வேளெனக்கு
மோகங் கொடுத்தான் பூதரமே. (கூ)

## கடைமடக்கு.

கனிவா யொழுகு மருந்தேனே
காய்ச்சுப் பாலு மருந்தேனே
கல்லாய் முளைத்த விம்மலையே
கழிப்பா யெனது விம்மலையே
நனியே துவர்க்குங் கடுக்காயே
நவில்வர் தாயர் கடுக்காயே
நாளும் புலிவாழ் கந்தரமே
நான்பாய் மரக்கா கந்தரமே
பனியே கிளிவாழ் பஞ்சரமே
படுத்தா லணையிற் பஞ்சரமே
படிந்து பொழிக வருமாலே
பண்பாய் மணங்க வருமாலே
வனமாய் நிறைந்த தருவீரே
மகிழ்வெப் படியுந் தருவீரே
வளர்நா கய்ய மன்னனையே
மருவத் தடுக்கு மன்னனையே. (௰)

## கடைமடக்கு.

அடுத்து வாழும் வண்டினமே
அணைய விதுவே வண்டினமே
அங்கே யுலவும் பாற்றீரே
அடியா ளருந்துன் பாற்றீரே
தொடுத்த பெருவா யம்புலியே
தூவுந் தழலா யம்புலியே
துதிக்கு மானே பெருகயமே
தோழி வார்த்தை பெருகயமே
எடுத்த தோகை வருமயிலே
யெனைச்சூழ் வோரை வருமயிலே
யிதமாய் நீண்ட வாலிபமே
யென்றுன் படைத்தேன் வாலிபமே
மடுக்குஞ் சுனைநீர் மடங்கலையே
மைய்ய லெனக்கு மடங்கலையே
வளர்நா கய்ய மன்னனையே
மருவத் தடுக்கு மன்னனையே. (௰௧)

## கடைமடக்கு.

இதமா யோங்கும் பலவிலையே
 யெடுத்தான் மாரன் பலவிலையே
 யிரைந்து திரியு மஞ்சினமே
 யெவர்க்கு நாளு மஞ்சினமே
நிதமும் வாழு மஞ்சுகமே
 நீளு மொருநா ளஞ்சுகமே
 நிறைந்த பூவில் வருந்தாதே
 நேர்ந்து கலந்தால் வருந்தாதே
சதமாய்க் குதித்து வருமந்தியே
 தழலா யெனக்கு வருமந்தியே
 சார்ந்து வாழும் பழியர்களே
 தாதி மாரும் பழியர்களே
மதமே பொழியுங் குஞ்சரமே
 வருத்து மதன்றூக் குஞ்சரமே
 வளர்நா கய்ய மன்னனையே
 மருவத் தடுக்கு மன்னனையே. (௰உ)

## சதுரகிரிக்கும் மதனுக்குஞ் சிலேடை.

மடக்கு.

கரும்பன் றியும்பூஞ் சிலையெடுத்தாய்
கரும்பன் றியும்பூஞ் சிலையெடுத்தான்
கண்ணு லெரியுண் டாமுனக்கே
கண்ணு லெரியுண் டானவனும்
வரும்பூ வையும்பெற் றுய்மனங்க
வரும்பூ வையும்பெற் றுனவனு
மகிழு மாத ரையுமடுத்தாய்
மகிழு மாத ரையுமடுத்தான்
விரும்புங் குணவான் றிருமருதூர்
வேந்தன் செயநா கயமகிபன்
மெய்க்கும் வரையே பூதரமே
விடுப்பா னவனும் போதரமே
அரும்புன் கங்குலையு மடுத்தா
யரும்புன் கங்குலையு மடுத்தா
னந்த மதனைப் பொருந்தியதா
லந்த மதனை நிகர்த்தாயே. (௰௩.)

## சிவனுக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

### பின் கடைமடக்கு.

அம்மை யிடமு மகலாம
லரவந் தரித்து மானேந்தி
யரிய வார ணமுந்தாங்கி
யரியு மொருபா லமர்ந்ததனு
னம்மை யாளு மீசனிகர்
நவிலுஞ் சதுர கிரிவேந்த
னயக்கும் புகழ்நா கய்யதுரை
நாளு மகிழும் பூதரமே
செம்மை யான வலியானே
தியங்கித் திரியும் வலியானே
செவ்வாய் ருசிதப் பாக்களவே
செல்லா தனமும் பாக்களவே
கொம்மை சேர்ந்த *பல்லுகமே
குறித்த வொருகாள் பல்லுகமே
குணமாய் விளங்குங் †காட்டாரே
கோமா னலங்கல் காட்டாரே. (௰௪)

---

* பல்லுகம்—கரடி.

† காட்டார்—காட்டு ஆத்திமரம்.

## கடலுக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

### பின் கடைமடக்கு.

அஞ்சம் பார்க்குங் கனமுரசுற்
றரவ மேவி வளம்பொருந்தி
யடர்ந்தே குழையின் சங்கமுற்றே
யாரம் புலியுந் தோன்றுதலாற்
கொஞ்சுங் கடல்போற் சதுரகிரிக்
கோமான் புகழ்நா கய்யதுரை
குணம்போற் புயம்போல் வளர்ந்தெழுந்த
கோலம் பெருகும் பூதரமே
மிஞ்சுங் காட்டு மாமுலையே
விம்மல் காட்டு மாமுலையே
மேவி யங்க மருந்தரகே
மிகவுந் தருவே னருந்தரகே
தஞ்ச முடன்வாழ் தேற்றுவே
தயங்கு மனத்தைத் தேற்றுவே
சாரி மலையி னுளமிளகே
தமியேன் றன்பா னுளமிளகே. (௫)

## மாதர் முலைக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

### பின் கடைமடக்கு.

களபஞ் சேர்ந்து மாலையுற்றுக்
காம்பு திரண்டு பாலையுற்றுக்
கலையு மேவிக் கோலமுற்றுக்
கானம் பொருந்தி யிருப்பதனாற்
புளகஞ் சேரு மாதர்முலை
போலுஞ் சதுர கிரிக்கதிபன்
பூமான் புகழ்நா கய்யதுரை
புயம்போ லெழுந்த பூதரமே.
வளமே மிகுந்த கண்ணிரே
வடித்தேன் குருணிக் கண்ணிரே
வழிந்தே யொழுகும் வண்டேனே
மலர்க்கொம் பெனத்து வண்டேனே
இளமை சேருப் புள்ளிரே
யெனக்கு நீரன் புள்ளிரே
யெதிரிலாக்கண் டீரவமே
யின்றே யென்கண் டீரவமே. (டுசு)

## பிரம தேவனுக்கும் கவுண்டினியநதிக்குஞ் சிலேடை.

### மடக்கு.

அன்னந் தினமே யூர்ந்தவனு
மழகார் புவனம் படைத்தவனு
மவிரும் பூமேல் வசிப்பவனு
மரிய விருக்க மடுத்தவனும்
மன்னும் பிரம தேவனைப்போல்
வழுத்துங் கவுண்டி னியநதியான்
மகவான் புகழ்நா கய்யதுரை
மகிழும் பெரிய பூதரமே
இன்னம் படர்வல் லிக்கொடியே
யின்னம் படர்வல் லிக்கொடியே
யிலங்கு மரத்தின் பத்திரமே
யெனக்கே வருது பத்திரமே
நுன்னும் பசிய வரவெதிரே
தோயத் தலைவன் வரவெதிரே
தோற்றம் பார்ப்பேன் கல்லகமே
தோழி மார்க்குங் கல்லகமே. (௰எ)

முருகக் கடவுளுக்கும் கவுண்டினிய நதிக்குஞ் சிலேடை.

வேலை யடுத்து மமலை பெற்றும்
விண்ணு டரையுங் காத்தருளி
விரைவாய்த் திருக்குன் கடம்படர்ந்து
மேலா டிவருந் தன்மையினாற்
சீல மிகுந்த முருகனைப்போற்
செழிக்குங் கவுண்டி னியநதியான்
றிடவான் புகழ்நா கய்யதுரைச்
சீமான் மகிழும் பூதரமே
கோல மிகுந்த பஞ்சணையிற்
கூடா மாதர் தமைக்காயுங்
குணமா மதியைக் குளிரி யென்றுங்
கூறு வமுத கிரணனென்றுஞ்
சால மாக வெனக்குரைத்த
தாதி யருஞ்சு தாதியரே
தண்ணி லாவென் றுரைக்குமிந்தச்
சகத்தார் முழுவஞ் சகத்தாரே. (௰அ)

## யானைக்கும் கவுண்டினிய நதிக்குஞ் சிலேடை.

### பின் கடைமடக்கு.

கோடு தாங்கி மணியலைத்துக்
கொண்டு மோடை சேர்ந்துலவிக்
குணமாய்க் காலிற் சென்றேறிக்
குறிக்க வளமுங் கொண்டதனு
னீடு காத்து மால்யானை
நிகருங் கவுண்டி னியநதியா
னிசவான் புகழ்நா கய்யதுரை
நீதன் மகிழும் பூதரமே
தோடு லாவுங் காவாயே
சுகந்தந் தெனையுங் காவாயே
துய்ய பலவி னரும்பலமே
சூழ்ந்து காக்கு னரும்பலமே
ஆடு வனத்துக் கூடாவே
யனந்தா னருந்தக் கூடாவே
யடர்ந்து வாழு முள்ளுடையே
யடடா சரியு முள்ளுடையே. (௰௯)

## பாவலருக்கும் முட்டகநாட்கேக்குஞ் சிலேடை.

### பின் கடைமடக்கு.

கவிகண் மிகவும் பழக்கமுற்றங்
கரிய பிரசங் கத்தினயங்
காட்டிப் பலவா சிப்பதனுற்
கனகா வியமுங் கைக்கொளலாற்
புவியோர் புகழும் பாவலர்போற்
புனிதம் பெறுமுட் டகநாடன்
பூமான் புகழ்நா கய்யதுரை
புயம்போ லெழுந்த பூதரமே
அவிரு மூரு மதிக்கலையே
யாரு மூரு மதிக்கலையே
யங்கே யிருக்கு மரும்பிடியே
யார்தாங் குவர்வே ளரும்பிடியே
கவியே வளர்மஞ் சாடிகளே
கவில்வா ரெவருஞ் சாடிகளே
நறையார் மலர்சேர் தாதினமே
நலஞ்செ யாண்மா தாதினமே. (உ௰)

சந்திரனுக்கும் முட்டகாட்டேக்குஞ் சிலேடை.

வனமா யங்கங் கலைசேர
வானத் திசைந்து மானமுற்று
மகர ராசி கர்க்கடகம்
மருவிச் செழுமா துளங்காயுங்
கனமும் பெறலாற் சந்திரன்போற்
காட்டுந் திருமுட் டகாடன்
கனவான் புகழ்நா கய்யதுரைக்
காமன் மகிழும் பூதரமே

(மன்மதன்றேருக்கு வந்த என்ற பேர்வந்த காரணம்.)

தினமு மநங்க னூர்ந்துவருந்
தேராம் பொதிகை நறுந்தென்றல்
சேரா மாதர் மிகவருந்தச்
சிறி ரவிக்கை தனைப்பிறி
மனமுந் தனமுங் கலக்கமுற
வளர்ந்தே விம்மப் புலிபோல
வந்து பாய்வ தாலதற்கு
வந்தென் றொருபே ருரைத்தாரே. (உக)

பிரமதேவனுக்கும் மயிலுக்குஞ் சிலேடை.

சிறைமே லிருக்கு நான்முகமுஞ்
சேரு மண்டங் களிப்படைக்குந்
திருமா லாலும் வந்துலவித்
திகழ வன்னம் பொருந்தியதா
னறையார் கமலப் பொருட்டுறையு
நாதன் போலு மயிலுலவி
நயங்கு லாவு முட்டக நன்
னுட்டுக் கதிபன் யாவருக்கு
மிறையோன் புகழ்நா கய்யதுரை
யென்று மகிழும் பூதரமே

(மன்மதன் முரசுக்கு வேலை யென்ற பேர்வந்த காரணம்).

யிரையும் வாரி மலர்ப்பகழி
யென்மேல் வாரித் தொடுப்பவனுக்
கறையு முரசா யிருந்துமைய
லாக மாதர் தமைவருத்து
மதுவே வேலை யானதனு
லதனை வேலை யென்பாரே. (உஉ)

கோயிலுக்கும் மருதூர் நகருக்குஞ் சிலேடை.

திருவா சியுமந் திரியுமுற்றுச்
    செழுவா கனமும் பொருந்திநிதந்
    திரஞ்சேர் மணியங் காட்டியங்குச்
    சேர்ந்து மனிதர் கும்பிடலாற்
றரும மேவுங் கோயிலைப்போற்
    றழைக்கு மருதூர் புரந்தருளுந்
    தனவான் புகழ்நா கப்பதுரைச்
    சாமி மகிழும் பூதராமே

(மன்மதனுக்கு மதன் என்ற பேர்வந்த காரணம்).

யிருளா மதயா னையைநடத்தி
    யேதா மதமுஞ் செய்யாம
    லிதமாய் மனச்சம் மதமாகி
    யேதா மதரந் தனைமடித்து
மருவா மாத ரிடத்தில் வந்து
    மயங்க மாரன் மலர்ப்பகழி
    மதமாய்த் தொடுக்கு மதனாலே
    மதனென் றவனைப் புகல்வாரே. (உ௯)

பொன்னுலகத்திற்கும் மருதூர் நகருக்குஞ் சிலேடை.

பின் அடி முதன்மடக்கு.

பொன்னி னுடன்கற் பகத்தாரும்
புகழ்சேர் சங்க நிதியாரும்
புலவர் களுஞ்சேர்ந் துலவிமிகப்
பொருந்த வளவா ரணம்விளங்கித்
துன்னி யதனாற் பொன்னுலகாய்த்
தோன்று மருதூர்க் கதிபதியாந்
துரைநா கயதேய் வேந்திரவுத்
துங்கன் மகிழும் பூதரமே
வன்னம் படருந் தோகாய்வேள்
வன்னம் படரும் பொருப்பேனு
மானங் கொடுக்கு மால்வரையே
மானங் கொடுக்கும் வகையறியாய்
இன்னந் தரங்கஞ் சேர்சுனையே
யின்னந் தரங்கஞ் சொல்வாயே
யினிக்கும் பாகும் வெறுத்தேனு
ரினிக்கும் பாகும் பேசுதற்கே. (உச)

மோகராவுக்கும் மருதூர் நகருக்குஞ் சிலேடை.

அரிய வரையும் பொருந்தியதா
லழகார் நகையும் பெருகியதா
லாரும் புகழ்மா தங்கமென்று
மங்கை யுலவி யிருப்பதனு
லரிய தங்க மொகரா வென்
ளுேது மருதூர்க் கதிபதியா
யுற்ற முகிஞ கய்யதுரை
யுவக்கும் பெரிய பூதரமே

விரகநாயகிக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

விரியு முள்ளங் கல்லாகி
மிகவே யச்சம் படர்ந்து கன
வேளம் படுத்து மால்பொருந்தி
வேண்டு மன்னந் தனைநீத்துத்
தெரியுங் கண்ணு லருவிசொரிந்
திருந்தா யெனைப்போ லுன்னைவந்து
சேரா திருக்குங் கணவரையே
செப்பாய் தருவின் கணவரையே. (உரு)

## இரதத்துக்கும் முல்லைமாலைக்குஞ் சிலேடை.

### பின் அடிமுதன்மடக்கு.

அங்கந் தாத்தை யடுத்ததனு
லதிலே மிகுந்த வளம்பெறலா
லணிவண் டிலங்க மேவியதா
லரிய விரைவாய்ந் திருப்பதனுற்
றங்கும் பெரிய ரதம்போலத்
தழைக்கு முல்லைத் தொடையணிந்த
தடமார் புயகா கய்யதுரைச்
சாமி மகிழும் பூதரமே
துங்க வனமே மயலாலே
துங்க வனமே புரியேனே
சோதித் தாரு வேயென்மனஞ்
சோதித் தாரு மாற்றலையே
சங்க விலையே யென்மனங்க
சங்க விலையே மதன்வளைத்தான்
தந்தி யான வல்லலதித்
தந்தி யானஞ் செய்வேனே. (உ௬)

மேகத்துக்கும் பாட்டுடைத்தலைவன் புயத்துக்குஞ் சிலேடை.

வண்ணம் படைத்துத் திரண்டெழுந்து
வளர்மின் னாரம் பெற்றிலங்கி
மருவி மிகவீ ரம்பொருந்தி
மலையி லோங்கி வந்ததனாற்
றண்ணம் புயல்போ லுதித்தபுயந்
தனின்மின் போலு முல்லையந்தார்
தரித்தோன் புகழ்நா கய்யதுரை
தழுவா நாளிற் பூதரமே
எண்ணம் பலவாய் நானிருந்தே
னிருந்தா ரருளா திருந்தாரே
யிரும்பிற் காய்ந்த தகட்டைவிரித்
தென்று யரும்பா யென்றாரே
பண்ணங் கனிவாய் மாதர்தந்த
பாகும் பாலுங் கசப்பாகும்
பதரா தேயென் றெனக்குரைத்த
பாரார் களங்கண் பாராரே. (உஎ)

## பின் கடைமடக்கு.

தாயாங் கடலை யுழக்கியமங்
    தாத்தி னகத்தைத் தணிப்பதற்காய்ச்
    சார்ந்து புயத்தை யடுத்திருந்து
    சமயம் பார்க்குந் திருமாதர்
வாயாற் சிரித்த தொப்பாக
    மணஞ்சேர் முல்லைத் தொடையணிந்த
    மகவான் புகழ்நா கய்யதுரை
    மதிக்க வளர்ந்த பூதரமே
காயார்ந் திருக்குந் தருவினமே
    காணீர் மாரன் றருவினமே
    கருதுங் கிளியின் குஞ்சிரே
    கலந்தா லேழைக் குஞ்சிரோ
தூயோ ரான முனிவர்களே
    தோழி மாரு முனிவர்களே
    சூழ்ந்து கவியுஞ் செல்லீரே
    தூது நீவிர் செல்லீரே. (உஅ)

பின் அடி முதன்மடக்கு.

கிள்ளை போலப் பறந்துமொன்னர்
கிரீடந் தூசி படநொறுக்கிக்
கிளம்பிப் பரிவாய் வருதலினற்
கிள்ளை தூசி பரியெனப்பேர்
கொள்ளும் புரவி யானெவர்க்குங்
கோமான் புகழ்நா சய்யதுரை
குலவுங் கீர்த்தி போல்வளர்ந்து
கோல மிகுந்த பூதரமே
யுள்ள மலைத்தே னிருந்ததனை
லுள்ள மலைத்தேன் பார்த்திருந்தா
யும்ப லாருந் தகைமையினை
லும்ப லாரும் பழிக்கவைத்தாய்
வெள்ளம் புதைப்ப தாலுமலை
வெள்ளம் புதைப்ப தறிந்திருந்தாய்
மேன்மை கிடைத்த தாலெனக்கு
மேன்மை கிடைக்கச் செய்வாயே. (உ௧)

வேறு.

## குதிரையின் சிறப்புரைத்தல்.

தண்டை யோசை கொண்டல் கிறி
யண்ட கோள மண்டவே
தண்ட மீது கொண்டு தான்பிர
சண்ட மாகி யண்டலார்
மண்டை துண்ட மாக வெற்றி
வந்த குந்தி லிப்பரி
மன்ன ளுக யேந்த்ர ராச
தென்ன வன்வ ரைக்குளே
அண்டு மேக மேபுவிக்குள்
யா னு மேக மாகினே
னணைந் திருந்த மயில்களேயென்
மனத்தி ருந்த மொழிவீரே
கண்ட மேதி யங்குலங்கள்
கா ணு மேதி யங்குதே
காவி லம்புல் வாய்மதன்ம
காவி லம்பு பாயுதே. (௩௰)

இதுவுமது.

வட்ட மிட்ட தட்டி யெட்டி
யட்ட திக்கு முட்டியே
மட்ட றக்கு தித்ததுட்டர்
பற்றெ றிக்க வெற்றியே
கட்ட ரைக்கு ளுற்றவாசி
திட்ட மாக வேறினேன்
கத்த ஞக யேந்த்ர ராச
சித்த சன்வ ரைக்குளே
யிட்ட வஞ்சி யேமினர்கள்
திட்ட வஞ்சி மெலிவனே
விசைய வாளி யேவில்வேளென்
மிசைய வாளி யேவினன்
கிட்ட மேவு தந்தியே
கிலேச மேவு தந்தியே
கிளைத்தெ ழுந்த கிளைகளை
கிராத ராவர் கிளைகளே. (ரு௧)

யானையின் சிறப்புரைத்தல்.

துட்ட ரைத்து ரத்தி யம்மி
யிட்ட ரைத்த தென்னவே
தொட்டி ழுத்த ழுத்தி யெற்றி
விட்ட ரைக்க ணத்திலே
திட்ட மிட்ட கொட்ட முற்ற
வெற்றி மெய்க்க ளிற்றினன்
சீல ஞக யேந்த்ர ராச
சித்த சன்வ ரைக்குளே
சட்ட மிட்ட தாரை யேந
விட்டம் வைப்ப தாரையே
தத்தி வந்த நாவி யேதி
கைக்கு மென்ற னவியே
இட்ட முற்ற வருண மேந
கைக்கு முற்ற வருணமே
யெங்கு மேவு கலக மேசொ
லிங்கு மாதர் கலகமே. (௩௨)

இதுவுமது.

பின் அடி முதன்மடக்கு.

எத்தி றத்தை யுற்றெ திர்த்த
சத்து ருக்க ளத்தையு
மெற்றி செற்றி சிற்றெ றிக்க
மொத்து தற்கு மெய்த்தடி
கைத்த லத்தில் வைத்தி ருக்கு
மத்த கக்க ளிற்றினன்
கத்த னாக யேந்த்ர பாச
வுத்த மன்வ ரைக்குளே
முத்தி னங்க ளேமொ ழிந்து
முத்தி னங்க ளாகுதே
முருகு தில்லை யேயுனக்கு
முருகு தில்லை யேமனம்
மெய்த்த வத்த ரேயு டம்பு
மெய்த்த வத்த மெய்தினேன்
மேதி னிக்கு ளுற்ற பானு
மேதி னிக்கு தென்பதே. (௫௫)

## வேறு.

### சிவனுக்கும் கோடிக்குஞ் சிலேடை.

தைய லொருபான் மருவி யதாற்
சார்ந்தோர் காலி லாடியதாற்
றவளம் பெருகுஞ் சங்குலவித்
தனிக்க வேணி யடுத்ததனல்
வையம் பணியு மீசனைப்போல்
வயங்கும் வெள்ளைப் பக்கரைடால்
மன்னன் செயநா கய்யதுரை
மருவா நாளிற் பூதரமே
மைய லடைந்து நீயி ருந்தாய்
மைய லடைந்து நானி ருந்தேன்
வனத்தை யடுத்தாய் நீயிருந்த
வனத்தை யடுத்து நானிருந்தேன்
வெய்ய வனங்க நீயெடுக்க
வெய்ய வனங்க னெனையடுத்தான்
வெண்ணி லாவை நீயடுக்க
வெண்ணி லாவை யுற்றேனே. (௩௪)

## பின் அடி முதன்மடக்கு.

திங்கள் வதன நமது துரைச்
சீமான் போலும் வல்லவர்கள்
செகத்தி லிலையென் றேமதித்துத்
தெய்வேந் திரன்றன் மாநகர
மெங்கும் பார்க்கச் செல்வதுபோ
லெழுந்த வெள்ளைப் பக்கரைடா
லேய்ந்த செயநா கய்யதுரை
யென்று மகிழும் பூதரமே
யங்கங் கோடிப் படர்கொடியே
யங்கங் கோடி யிருப் பேனே
வரிதாய்ப் பறக்குந் தேனினமே
யடியாள் சேவித் தேனினமே
தங்கும் பலவ மேதாயர்
தங்கும் பலருந் தூற்றுவரே
சாரல் விளைந்த மாதினையே
சலிப்பே னின்ற மாதினையே. (ருடு)

மேகத்துக்கும் மணமுரசவாத்தியத்துக்குஞ் சிலேடை.

அண்டி வாரு நெருங்கி மிகுந்
தடிக்கும் பழக்க முற்றேபின்
னருஞ்சக் கரத்தைப் பொருந்தினதா
லவனி முழுதுந் தொனிகேட்கக்
கொண்டல் போல மணமுரசங்
குமுறி முழங்கும் வாசலினன்
கோமான் செயநா கய்யதுரை
குணம்போல் வளர்ந்த பூதரமே
வண்டு முழக்குங் கடம்பினமே
மதனு முழக்குங் கடன்முரசே
மாத்திற் குதிக்க வருங்கவியே
மதியங் குதிக்க வருந்துவனே
கண்ட கடமா னேநரியே
கனசங் கடமா னேனறியே
காவிற் றுணரே மையலினாற்
கலகற் றுணரேன் கண்டாயே. (௩௪)

## கோடைமுரசவாத்தியச் சிறப்புரைத்தல்.

வந்த பேர்க்கு நாமருள்வோம்

வாரு மெனவே யழைத்துமன்னன்

மகிழ்ந்து கொடுத்தற் கிடாக

மாட்டோ மெனவே தருநாளைச்

சந்த தமுந்தான் கொடைமுரசந்

தழங்கித் தொனிக்கு மன்றிவினன்

றனவான் செயநா கய்யதுரைச்

சாமி மகிழும் பூதரமே

கொந்து லாவு மதுகரமே

குவித்தே னுனக்கெ மதுகரமே

கொண்ட றி ரண்டேற் றினமழையே

கோமான் றனையித் தினமழையே

சிந்தை மகிழ்மான் சினத்தடமே

செய்தான் மதனன் சினத்தடமே

தினமுக் தாய்வாய்த் திட்டுகளே

சிறியாள் பொறுக்கேன் றிட்டுகளே. (௩௭)

## படைமுரசவாத்தியச் சிறப்புரைத்தல்.

பொன்னு டதனி லிந்திரனும்
புவியின் மருவார் பன்னியரும்
புந்தி சலிக்கக் கழுகினமும்
புகழு மரம்பை மாதர்களு
முன்னே மகிழத் துலங்குபடை
முரசந் தொனிக்கு முன்றிலினன்
முருகன் செயநா கய்யதுரை
முழுது மகிழும் பூதரமே
புன்னு லெனக்கும் பயனிலையே
யொன்றுந் தெரியேன் பயனிலையே
யொருமித் துருவாய்த் திரண்டாயே
யொருமித் துருவா யெனக்கிருநீ
தன்னு லெழுந்து வந்தனையே
தற்கா வுனக்கு வந்தனையே
தனித்த வரையே வசைசொலவெத்
தனித்த வரைவா யடைப்பாயே. (டுஅ)

மலையினிடத்து தலைவி இரங்கிக்கூறல்.

நினைக்கு மடியார் சிந்தைதனி
னீங்கா திருக்குந் திருமால்கை
நெடுஞ்சக் கரம்போ லஞ்சாரை
நெஞ்சைப் பிளக்கு மாலையினுன்
றனக்கே நிகர்தா னுகவளந்
தழைக்கு மருதூர் தனைப்புரக்குந்
தரும னுக யேந்திரவு
தாரன் மகிழும் பூதரமே
யெனக்கே தாயர் தோழியர்க
ளெல்லார் மனதுங் கன்மனதென்
றெண்ணி யெனது வருத்தமெல்லா
மெடுத்தே யடுத்துன் பாலுரைத்தேன்
கனத்தே யுனது வடிவமெல்லாங்
கல்லா யிருப்ப தாலுமொருக்
காலு முருகி யிளகியன்பாய்க்
கருணை புரிய மாட்டாயே. (௫௧)

அடி முதன்மடக்கு.

தரமே தெரிந்த கனவான்சுந்
தரமே மிகுந்த மகவான்மந்
தரமே நிகர்த்த புயமால்கந்
தரமே நாணைக் கொடுப்போனு
தரமே யாலி னிலையிடையந்
தரமே மதிமா முகந்தான
தரமே விழி மடந்தையரா
தரமே செயும்வே ளதிகவெற்றி
தரமே தினியோர் போற்றுசுதந்
தரமேன் மையினன் முல்லையந்தார்
தரித்தோன் செயநா கய்யதுரை
தழுவா நாளிற் பூதரமே
பரமே சுரனைச் சலிப்பேனம்
பரமே யொலிக்க மெலிவேன்பம்
பரமே போலச் சுழல்வேனுன்
பரமே யெனைக்கண் பார்ப்பாயே. (௬௰)

அடிமுதன்மடக்கு

சனமே துதிக்கும் ரத்நசிம்மா
சனமே படைத்தோன் ரஞ்சிதவ
சனமே யுரைக்குந் துரைசுகபோ
சனமே செயுமிந்திரனரவா
கனமே கவிஞர் தமக்குதவிக்
கனமே பெருகுங் கிர்த்திபான்
கனக வரைநேர் நாகயமால்
கலவா நாளிற் பூதரமே
தனமே புடைத்துப் பால்பழமோ
தனமே வெறுத்துச் சந்திரவ
தனமே வாடி யெவருக்கும்வந்
தனமே செய்தேன் மதன்கணைவி
தனமே கொடுக்க மனம்பெறுசந்
தனமே யணியே யுனக்கருள்வேன்
றனமே மருதூர்க் கதிகதுரைத்
தனமே லவர்க்குச் சொல்வாயே (௪௧)

## இடைமடக்கு

தனது பேரை நிதம்புகழா
தாரைப் பேரை யாவெனவுஞ்
சாற்றும் பேரை யாதரித்துத்
தனக்கும் பேரைப் பெருகவைத்து
மனது மகிழுங் கட்டாரி
மதவே ளனுநா கய்யதுரை
மதவே முத்தின் மேற்பவனி
வந்தா னவனைக் கண்டுவந்தே
னெனது சரியுங் கருங்கூந்த
லினின்மஞ் சரியு மோலைகலை
யெல்லாஞ் சரியும் படியாயென்
னிடம்வா சரியுஞ் செய்துபின்னுஞ்
சனத மேவி மதன்பகழி
தனையு மேவி விடானுங்
தனித்து மேவி காரமுற்றுச்
சயிலமே விண்டு னைத்தேனே (௫௨)

அன்ன சத்திரத்துக்கும் சதுரகிரிக் குஞ் சிலேடை

பின்அடி முதன்மடக்கு.

சேர வனமோர் பாலனையுஞ்
  சிறக்க மிகுந்தோ சையும்பலவாய்ச்
  செந்தேன் குளனு மப்பளமுந்
  திகழ்பாயசமுங் கனவடையு
மார வருளும் புதுமையினு
  லரசர் பெருமான் றமிழருமை
  யறிந்தோன் செயநா கய்யதுரை
  யனசத் திரம்போற் பூதரமே
பாரமாத விக்குலமே
  பாரமாத விக்கு தென்பேன்
  * பட்டமேமை யனுக்குளகப்
  பட்ட மேனி யினைப்பேனே
சார லேகன் பாரடர்ந்து
  சார லேகக் கானேனே
  ‡ தாரா தரமே பலர்களுநொக்
  தாரா தரமே படைத்தேனே (சரு)

---

* பட்டம்—கவரிமா. ‡ தாராதரம்—மேகம்

## அகத்திய முனிக்கும் வேலுக்குஞ் சிலேடை

### பின்கடை மடக்கு

உகந்து மலையப் பாங்காக
வரைவா யிருந்து கடனீரை
யுண்டு வரையை யுள்ளடக்கி
யுயர்ந்த கேள்வி யகத்தியன்போற்
றகுந்த வடிவே லேந்துகந்த
சாமி பதத்தைத் தினம்பணியுந்
தனவான் செயநா கய்யதுரை
தழுவா நாளிற் பூதரமே
புகுந்து மதன டம்பரமே
புரிந்து சமரா டம்பரமே
பொல்லாச் சகியர் கும்பாலே
புளிக்குந் தேன்கைக் கும்பாலே
மிகுந்த கலைசேர் தானவனே
வெறுந்துன் மார்க்கத் தானவனே
வேலை யொலியு மாறாதே
விரும்பு மோக மாறாதே (௪௪)

## மேகத்துக்குந் திருமாலுக்குஞ் சிலேடை.

### மடக்கு.

வாரிப் பயத்தை யருந்தலுற்று
வடிவங் கருமை காட்டிவரு
மாவி நிறைந்து மாமின்னு
மருவ லானுங் கொண்டலைப்போற்
பூரித் திருக்குந் திருமாலைப்
போற்று நேச னுலகமெலாம்
புரக்குஞ் செயநா கய்யதுரைப்
போசன் மகிழும் பூதரமே
பாரித் திருக்குநீ வருணன்
பாரித் திருக்குந் தவிர்ப்பாயே
பலவந் தடுக்கு நீகவலை
பலவந் தடுக்குந் தடுப்பாயே
சாரிக் கணமே நீயெனக்கு
சாரிக் கணமே செய்வாயே
தரணி யார்க்கு நீயேசுந்
தரணி யார்க்குஞ் சொல்வாயே (சரு)

கடலுக்கும் ஆவணங்களுக்குஞ் சிலேடை

பின்கடை மடக்கு

சங்க நிறைந்து வங்கமுற்றுத்
தந்திக் கோடுந் தரங்காட்டித்
தானே யரிதா ரந்தோன்றித்
தழைக்குங் கடல்போ லாவணங்க
ளெங்குந் துலங்குந் திருமருதா
ரென்றும் புரக்குங் கட்டாரி
யெங்கோன் செயநா கய்யதுரை
யினிதாய் மகிழும் பூதரமே
துங்க முடன்வாழ் காடைகளே
சோறு தெனக்கிங் காடைகளே
சூழு மருத வஞ்சினையே
துணிவு கூற வஞ்சினையே
தங்கி யிருக்கும் வனத்தத்தையே
தடுப்பாய் வந்த வனத்தத்தையே
சார்ந்து புடையில் வாழுடும்பே
தணிக்க வரிதோ வேளிடும்பே (சக)

மாலுக்கும் சிவனுக்கும் மாதருக்குஞ் சிலேடை

அஞ்சக் கரத்தைப் பொருந்துதல்போ
லஞ்சக் கரத்தைப் பொருந்தியதா
லரிய விடையிற் றேன்றுதல்போ
லரிய விடையுந் தோன்றுதலாற்
கொஞ்சுங் கலையுந் தாங்குதல்போற்
கொஞ்சுங் கலையுந் தாங்குதலாற்
குணமா தங்கங் காத்ததுபோற்
குணமா தங்கப் பணிபெறலாற்
செஞ்சொன் மாலு மீசனும்போற்
றிகழு மாதர் குழா நடுவிற்
சீமான் செயநா கய்யதுரை
சிவிகை மீது வரப்பார்த்தேன்
கஞ்ச மலரை வேள்விடமோ
கஞ்ச லெனவே கிளம்பியென்றே
கஞ்ச லனமாய் நழுவியதாக்
கஞ்ச மதியா பூதரமே (௬௭)

## பின் அடிமுதன்மடக்கு

அனங்க னரும்புக் காரனிவ
னூர்க்குந் தயாள முள்ளதுரை
யளகா திபனி சனுக்குநட்பா
னதிநல் லோர்நட் பானிவனு
மெனவே யெவருந் துதிக்கவரு
மியலார் பதிசத் திரபதியா
மெங்கோன் செயநாகய்யதுரை
யென்று மகிழும் பூதரமே
தினமுங் கலப்பா னதையெணிநைந்
தினமுங் கலப்பா லருந்தாமற்
சித்தங் கலைந்து பலபலயோ
சித்தங் கலைந்து திரிவதல்லாற்
கனவி னுவு முலர்ந்தெனது
கனவி னுவுந் தடுமாறிக்
கருத்த னையுமே யெண்ணியென்றன்
கருத்த னையுமே வெறுத்ததுவே (சஅ)

அம்மன் கொண்டாடியின் வடிவுகதும் சோலைக்குஞ் சிலேடை.

பின் கடைமடக்கு.

காஞ்செங் தளிராய்க் கொடிபிரம்பாய்க்
கரகமேசெவ் விளரோய்க்
கமழ்பூங் குழையுங் கொண்டுநிதங்
காலா லாடு நறுஞ்சோலை
வாஞ்சே ரம்மன் கொண்டாடி
வடிவைக் காட்டுந் தென்மருதூர்
மன்னன் செயநா கய்யதுரை
மனது மகிழும் பூதரமே
திரஞ்சேர்ந் திருக்கு முயல்வாயே
தெளியும் படிக்கு முயல்வாயே
சீறும் புலியின் கனவாலே
தினமு மெலிந்தேன் கனவாலே
தாஞ்சே ராளித் தென்னகமே
தழுவ நினைக்கு தென்னகமே
தந்தா வளத்தி னிருந்தாளே
தாயும் பகையா யிருந்தாளே (சகூ)

சதுரகிரிக்கும்பாட்டுடைத்தலைவன்வரும்பவனிக்குஞ்சிலேடை

பின்கடை மடக்கு.

ஆர்வல் லியங்கள் லிலக்கடமா
னங்கு லாவப் பொருந்தானை
யடரச் சிலம்பு மாமயிலு
மாரு மெடுக்க வெண்கவரி
நேர்கின் றிலங்கி யங்குடைக
ணெருங்கச் சினக்கும் பரியுலவ
நிறைவாங் காவு மிசைகாட்ட
நேரா மதனன் முதற்பகழித்
தார்கின் றிலங்கும் புயசயிலன்
றனவான் செயகா கய்யதுரைச்
சாமி யுனைப்போன் மதயானை
தன்னிற் பவனி வரப்பார்த்தேன்
போர்வேள் வந்தெ திருமலையே
பொறுக்கேன் வருகதிருமலையே
போக்கா தினம திருமலையே
புரிவாய்கருணை திருமலையே (ருரு)

## இந்திரனுக்கும் பாட்டுடைத்தலைவன் வரும் பவனிக்குஞ் சிலேடை.

அரிய வமுத வசனருஞ்சூழ்ந்
தாருஞ் சசியின் மணம்பொருந்தி
யாடி வருமா தருநெருங்கி
யங்கே வெள்வா ரணங்குலவ
வுரிய மேன கையுந்துலங்கி
யோதும் பெருவச் சிரமுமின்ன
வுருவ சியுமே யிலங்கிமன
துவந்து மலர்மான் விளங்குபுயத்
திருமால் பெருமா னென்மருதூர்ச்
சிமான் செயநா கய்யதுரை
தெய்வேந் திரன்போற் றண்டிகைமேற்
றெருவிற் பவனி வரப்பார்த்தேன்
றரவேள் விடுத்தான் சிற்சிலம்பே
தாங்கேன் காலிற் பொற்சிலம்பே
தயவா யெனது நெஞ்சிலம்பே
தையரை நினையேன் வன்சிலம்பே. (ருக)

## பின் கடைமடக்கு.

மேகங் கறுக்கும் படிகொடுத்து
  மிகவுஞ் சிவந்த மலர்க்கையினல்
  வீமன் றனக்குத் துடைதட்டி
  விசயன் றிருத்தேர் நடத்தியமால்
பாகம் பெருகுந் தமிழறிவிற்
  பனவான் கனவான் பாக்கியவான்
  பலவான் செயநா கய்யதுரைப்
  பாண்ட்யன் மகிழும் பூதரமே
யேகுங் கரடி யிருகாதே
  யிளங்காற் றமர்ந்தே யிருகாதே
  யெழிலார் மஞ்ஞைத் திருமுகமே
  யெனக்கு வரை யார்திருமுகமே
வேகம் பெறுமா வம்பிடரே
  மின்னுர் புரிவார் வம்பிடரே
  வெண்க வரிமா னின்றலையே
  விடியக் காணே னின்றலையே. (௫௨)

அடி முதன்மடக்கு.

தீரா சரச துரையேவந்
தீரா வாரும் வாருமென்றுந்
தென்று மையலைத் தீராத
தென்று கருணை புரியுமென்று
மாரா நாக யேந்திரன்கு
மாரா செயநா கய்யதிட
மன்று வெனவு மின்றுர்கள்
வணங்க நானும் வணங்கிகின்றேன்
பாரா வாரத் தொனியாதும்
பாரா வாரஞ் செய்ததுவே
பாவை யகமா னதனுலைப்
பாவை யகந்தூற் றிடச்சகியேன்
வாரா தரவு மதியையுன்னை
வாரா தரவு முலைக்கிலையே
மலையே யுரைத்தேன் மையலின்கம்
மலையே யுருகித் தீர்ப்பாயே. (௫௯)

கடைமடக்கு.

ஆரும் பெரிய கட்டாரி
  யணைக்கு மிடையான் கட்டாரி
  யலர்மீ துறைவான் கட்டாரி
  யங்கூர் மருதூர்க் கட்டாரி
காரு லாவு மழகிரு
  கமலப் பதத்தைத் துதித்துவருங்
  கனவான் செயகா சய்யதுரைக்
  காமன் மகிழும் பூதரமே
யேரு லாவுங் காத்தேனே
  யேழை யுனையே காத்தேனே
  யெழிலார்க் கிருக்குங் கேசரியே
  யியற்றுார் மனதுக் கேசரியே
போரு லாவுங் கைவரையே
  புகழ்வே ணுெப கைவரையே
  புல்லே கல்லா மதன்விடவே
  புலம்பு வேன்பூ மதன்விடவே (ருச)

மடக்கு.

கந்த னிருபா தந்தின மு

கந்த நிருபா தந்திர ம

காவ லவனே தென்மருதூர்க்

காவ லவனே யென்றெவருந்

சிந்தை யாரப் புகழும தி

செயவா னயவான் சத்குணவான்

சீமா னெனுநா கய்யதுரை

சித்த மகிழும் பூதரமே

சொந்த மெனவாழ் * வல்லுளி யே

தொடும்வே ளம்பும் ‡ வல்லுளி யே

சுருண்டு கிடக்கு மாசுணமே

சுடுமே திமிர்ந்த மாசுணமே

வந்து லாவு மப்புற வே

வருந்தி னேன்க ணப்புறவே

வான்மட் டுயர்ந்த தனைக்கிலையே

வளைபோ னதுவுங் கணக்கிலையே. (ருரு)

---

* வல்லுளி—பன்றி.

‡ வல்லுளி—வலிய கல்லைத் துளைக்குமோராயுதம்.

## பாட்டுடைத்தலைவனது நாவிற் கலைமகள் வந்திருத்தற்குக் காரணமுரைத்தல்.

### பின் கடைமடக்கு.

தனது நாதன் சிரமிழந்து
　தந்தை யிடத்தில் வாதுசெய்து
　தானே வேத மொழிந்துபொய்யுஞ்
　சாற்றி னேனென் றவனைவிட்டு
மனது மகிழ்ந்து வந்தகலை
　மானை நாவிற் குடியிருக்க
　வைத்தோன் செயநா கய்யதுரை
　மதிக்க வளர்ந்த பூதரமே
யினிய மயிலின் பார்ப்பீரே
　யேழை தனைக்கண் பார்ப்பீரே
　யேறி யுலவு மரைக்கணமே
　யினிமே லனு மரைக்கணமே
தனியே யிருக்கேன் செழுமுன்னையே
　தற்கா வசைப்பேச் செழுமுன்னையே
　தாவிப் பறக்குங் கஞ்சனமே
　தரியேன் கண்ணுக் கஞ்சனமே. (௫௬)

பாட்டுடைத்தலைவனது புயத்திற்றிருமகள் வந்திருத்தற்குக் காரணமுரைத்தல்.

மடக்கு.

மாயோன் திருடன் குறளன்வஞ்சன்
வறுத்த தடியன் கம்பெடுத்து
மாடு மேய்த்து மண்ணையுண்டு
வடிவங் கறுத்தோ னெனவெறுத்து
நீயே கனவா னென்றவந்து
நின்ற மாவைப் புயத்தில்வைத்த
நிசவான் செயநா கய்யதுரை
நித்த மகிழும் பூதரமே
வேயே திலக மேறுதலின்
மேலே திலக மேதரியேன்
மேவும் பதங்க மேயெனக்கு
மிகவும் பசப்ப தங்கமுமே
காயே கதம்ப மேமுலையிற்
கமழுங் கதம்ப மேயணியேன்
கருதுங் குறும்புள் ளீரேயிற்
காமன் குறும்புள் ளீர்ந்தீரே. (ருஎ)

## திருமாலுக்கும் வேலுக்குஞ் சிலேடை.

### மடக்கு.

நாமம் பெருகும் மருவலர்மே
னன்னு மாமங் கைமேவு
நாகந் தனையே வென்றுமின்னூர்
நாட்ட மதனை நேருதவு
நேம மதனுற் றிருமால்போ
னிலைத்த வேல னருள்பெருகு
நிசவான் செயநா கய்யதுரை
நிதமு மகிழும் பூதரமே
சேமந் தழைத்த குயின்மதனைத்
தினம்வந் தழைத்த தறியாயோ
சேருங் *கவந்த நீயெடுத்தாய்
திகழ்மோ கவந்த நான்காணேன்
மாமஞ் சினத்தை யெடுத்தாய்தாய்
வன்மஞ் சினத்தைப் பொறுப்பேனே
மணக்குங் குமப்பூ வெடுத்தாயே
மறக்குங் குமட்டி யனக்தானே. (ருஅ)

---

* கவந்தம்—நீர்.

தலைவி தன்மீது அன்பு புரியாத சதுரகிரியைப்பார்த்து அதன் காரணமுரைத்தல்.

மீன மீன மாகவிட்டு
வேலை வேலை யதனையொத்து
விடத்தை விடத்தான் கறுத்ததனை
வென்று வடுவை வடுவாக்கி
மானு *மானும் படியுதித்து
வந்த விழியார் மையல்கொள்ளு
மதவேள் செயநா கய்யதுரை
மதிக்க வளர்ந்த பூதரமே
கானு மதனிற் கொடும்புலியுங்
கடுஞ்சீற் றத்துத் தந்திகளுங்
காலிற் பாயும் பன்றிகளுங்
கடுவு லாவுங் கட்செவியு
மான கொடிய மிருகங்க
ளடுத்தெந் நாளும் பழக்கமுற்று
யதனாற் றானோ வேழைதனக்
கன்பு புரியா திருந்ததுவே. (௫௧)

* மானும்படி—வெட்கும்படி

மடக்கு.

குன்றுங் குன்றும் படியாகக்
கோடுங் கோடும் படியாம
குடத்தைக் குடத்தை வென்றுவட்டங்
குறையு மதியை மதியாம
லென்று மென்று போலவட்ட
மிட்டுக் ‡ களங்கங் களங்கமுற
வெழுதா மரையுந் தாமரையா
யிருக்க வெழுந்த முலைமடவார்
சென்று மருதூர் தனைப்புரக்குஞ்
சீமான் செயநா கப்பதுரைச்
செல்வன் பவனி கண்டுதெரி
சித்தார் நானுந் தெரிசித்தே
னன்று மலையே யையான
னன்று யகா மழுப்போர்க
னன்று மதிதான் சுடவுமத
னன்று தியுமே செய்தேனே. (௯)

‡ களங்கம்—கழங்கம் (= சூதாடுகருவி)

## மடக்கு.

வளமே நிகர்த்த கொங்கைசெம்ப
வளமே நிகர்த்த விதழார்வேள்
வளமே பெருகி யுயர்ந்ததந்தா
வளமேற் கொண்டு புரந்தரன்போற்
களப மேவும் புயனைசயிலன்
கனவான் செயகா கய்யதுரைத்
கன்னன் பவனி வரும்போது
கண்டு தொழுதேன் பூதரமே
தளமா கியபூங் கட்டோடே
சாதித் தான்வேள் கட்டோடே
தருமே லிருக்கு மங்கங்கே
சாடி சொலுவா ரங்கங்கே
யளிமே வியதான் றிக்காயே
யடுத்தே னுனைத்தான் றிக்காயே
யங்கே யுலவு மாநிலவே
யலர் தூற்றுத மானிலவே. (௬௧)

## மடக்கு.

தாமா வுலக மளந்தபரந்
தாமா நிரையைக் காத்தமுகுந்
தாமா தவரா மாநளனீ
தாமா மனுநீ தாமருதூர்ப்
பூமா விசையா நாகயமெய்ப்
புகழா பரனு வென்றுமின்னூர்
போற்றித் தொழுதார் நானுமென்றன்
பூணுஞ் சரியத் தொழுதுநின்றேன்
மாமான் சேர்ந்து மேவிடமே
மாதா பேச்சு மேவிடமே
மாக மடிக்கச் சென்றாயே
வைதாள் கோவிச் சென்றாயே
சீமான் புயசேர் செம்மலையே
தீர்ப்பாய் விரகச் செம்மலையே
செல்லே படியக் கறுத்தாயே
சேரா தமயக் கறுத்தாயே. (கூஉ)

## மடக்கு

துரங்க நடத்தி மருவார்ச
　துரங்க சேனை யழித்தோன்ம
　துரங்க னியும்வாய் கொண்டுபுகழ்ந்
　துரங்க நாதன் றனைத்துதித்தோன்
வரங்கூர் சனகி வடிவழகை
　மனத்தி னினைத்துச் சிலைவளைத்து
　மணந்தோன் செயநா கய்யதுரை
　வள்ளன் மகிழும் பூதரமே
திரஞ்சேர்க் திருக்குங் காயாவே
　சேர்ந்தான் மதியுங் காயாவே
　சேணையடுத்த தாவரமே
　தெளியும் படிநீ தாவரமே
கரங்கொண் டுலவும் போதகமே
　கலந்து நானெப் போதகமே
　களிப்பே னேடுஞ் *சல்லியமே
　காணுய் மாதர் சல்லியமே (௬௩)

* சல்லியம்—முட்பன்றி

## திருமாலுக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை

### பின் அடி முதன் மடக்கு

ஆன கருந்து வரைபெறலா
லங்கோ தண்ட மடுத்ததனு
லார மணிபெற் றிலங்கியதா
லரிய வளையு மேந்தியதான்
மான பரனுந் தென்மருதூர்
மகவான் செயநா கய்யதுரை
வரிசைத் திருமா லாகுமென்று
வாழ்த்தி வழுத்தும் பூதரமே
யேன மேகித் தியமுமெளி
யேன மேக லையும்விடுத்தே
னேலக் காயே யகங்கன்முலை
யேலக் காயே கணைவிடுத்தான்
றான மாவே மையறுகி
தான மாவே லையிற்பெரிதே
சாதிக் காயே பிடித்தபிடி
சாதிக் காயே விதிதானே. (௬௪)

## பின் கடைமடக்கு

ஆரு மதியில் யூகியல்லா
லாரு மதிய லறிவினுக்கென்
றவனி தான்சொல் லும்புகழ்மன்
னவனி தான முள்ளவள்ளல்
பாரை யளந்து மாவலிதன்
பார முடியி லோங்கிவைத்த
பதத்தான் செயநா கய்யதுரைப்
பாண்ட்யன் மகிழும் பூதரமே
சேரு முயற்சி செய்யலையே
சிலைவேள் யோசிச் செய்யலையே
செவியைத் துளைக்கு மோதலையே
தெளிவாயாரு மோதலையே
சோரு மெனக்கிங் கிடைக்கலையே
துரைவா யமுதங் கிடைக்கலையே
தொடுக்குந் தளபத் தாரானே
சுகமாய்க் கிருபை தாரானே (கூடு)

தலைவி சதுரகிரியைப்பார்த்து இரங்கிக் கூறல்

கல்வி முழுதுங் கற்றோர்க்குக்
காரை நிகராய்க் கொடுத்தணியக்
காரை வணங்கித் தன்னைவணங்
காரை யடர்த்துப் பொற்கமலச்
செல்வி வளருந் திருமருதூர்
செழிக்க வரசு செலுத்துமெங்கோன்
செயநா கய்ய சாமிதுரைச்
சீமான் மகிழும் பூதரமே
நல்ல விசன் மனமகிழ
நலஞ்சேர் கனியை யின்றிருந்து
நானுங் கனியென் றிரங்காம
ஞானு மதியை யடுத்திருந்தும்
வல்ல மதியை யருளாமல்
வாத மடுத்த தற்குமட்டும்
வாதப் படுத்தத் துணிந்திருந்த
வகையே தெனக்குப் புகல்வாயே. (௬௬)

## மடக்கு.

சந்தித் தாரைப் புரந்துகும்பத்
தனத்துத் தாரை கணவனையுந்
தாக்கித் தாரை தடுத்துநறுந்
தளபத் தாரை யணிந்தபிரான்
வந்தித் தாரணியி லுதித்து
வளருந் திருமால் கோத்திரத்தில்
வந்தோன் செயநா கய்யதுரை
மருவா நாளிற் பூதரமே
சிந்தித் தாரைக் காண்கிலீர்
சிந்தித் தாரை பொருந்தேனே
சித்தப் பான்மை தவறியுமஞ்
சித்தப் பாக மொழியேனே
முந்திக் காம னுங்கிளியு
முந்திக் காம னும்பொருவான்
முருகு மணிமா லையுங்காதின்
முருகு மணிய மாட்டேனே. (௬௭)

அடி முதன்மடக்கு.

மலைவி லாரை யளித்துமம்பொன்
மலைவி லாரைப் பணிந்துவிசு
வாசங் கவிநா வலர்க்குவைத்து
வாசங் கவிகை தந்தருள்வோன்
சிலைவே ளட்டாச் சரமதனைத்
தியானம் புரியுஞ் செயமுகுந்தன்
றிடவான் புகழ்நா கய்யதுரை
சேரா நாளிற் பூதரமே
தொலையா விரகங் கொண்டதுவுந்
தொலையா யிருக்கு தின்னமதன்
றுயரந் தரமேல் வருந்தாத
துயரந் தரமே நீபுகல்வா
யுலைவா யகப்பட் டிடுமெழுகா
யுலைவா யகமு முழல்வேனே
யோதித் தாரே சரியமின்று
§ ரோதித் தாரே யென்றேனே. (௯௮)

---

§ ஒதித்தார்—போரிட்டார்கள்,

பாட்டுடைத்தலைவன் குணத்துக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

பின் அடி முதன்மடக்கு.

தருமஞ் சார்ந்து பொறையடுத்துத்
  தனித்த மேன்மை பிரியாமற்
  சகல கலைக ணீங்காமற்
  றகுந்த வார முற்றதனாற்
குருவி னடியைப் போற்றியருள்
  கூர்ந்து மருதூர் தனைப்புரக்குங்
  கோமான் செயநா கய்யதுரை
  குணம்போ லிருக்கும் பூதரமே
மருவா ரகிலே நட்புடையார்
  மருவா ரான தறிந்திலையே
  வருந்தி னகர னேயடியார்
  வருந்தி னகரப் பழியாதோ
தருமே வியசார் பேயெனைமா
  தருமே வியந்து கொள்ளாரே
  தங்கும் புடையே சகிமாதர்
  தங்கும் புடையே னல்லேனே. (சுக)

மடக்கு.

தவிலு முழங்கப் பேரிகையுந்
தழங்க முரசந் தொனிக்கமிரு
தங்கஞ் சங்க மோலமிடத்
தாரை பூரி சல்லரியு
மெவையு மதிரத் தந்தியின்மே
லெங்கோன் செயநா கய்யதுரை
யெய்தும் பவனி கண்டுபணிந்
திருந்தே னுயர்ந்த பூதரமே
யிவருஞ் செயலை யின்றளிரே
யென்றன் செயலை யின்றறியா
யிலங்குங் கடக மேகரத்தி
லிசையுங் கடக மேயணியே
னவிலுங் கடமை யேகாக்க
நாளுங் கடமை யேயாகு
நாடுஞ் சகுன மேமருவ
நல்ல சகுன மிதுதானே. (எ௰)

மடக்கு.

பாத கமலத் துணைபணிந்தோர்

பாத கமலத் துணையாமற்

பரத்தை யருளித் திகழ்பீதாம்

பரத்தை யணிமா லருள்விரும்பும்

போத நிதமு மொருகுடைக்கீழ்ப்

புவனம் புரக்க மகுடமுடி

புனைந்தோன் செயநா கய்யதுரைப்

பூமான் மகிழும் பூதரமே

கோதி லாக்க விக்கணமே

கூடி வாழ்க விக்கணமே

கோமான் றனது திருத்தாரே

கொடுக்க மனதைத் திருத்தாரே

மாதர் பலருஞ் சடைத்தாரே

மாதாக் களும்பேச் சடைத்தாரே

வனிதாங் கவிலை யுருக்கரமே

மதனன் வாளி யுருக்கரமே. (எக)

மடக்கு.

அஞ்சா ரங்கந் தனைத்துளக்க
வஞ்சா ரங்கந் தனைவாங்கி
யம்பு விடுத்துச் செயம்பெறுகி
யம்பு வியில்வா ழெங்கோமான்
பஞ்சா யுதத்தி லொன்றெடுத்துப்
பார்த்தன் றனக்கு முழக்கிநின்ற
பலவான் செயநா கய்யதுரைப்
பாண்ட்யன் மகிழும் பூதரமே
மஞ்சார்ந் திருக்குஞ் சோலைகளே
மயலாற் பரிபோச் சோலைகளே
மகிழ மரத்துக் கோதாயே
மருவ வவருக் கோதாயே
செஞ்சா ரங்கக் கன்றீரே
தேற்றி டாத கன்றீரே
சேரு மயிலின் பெருஞ்சிறையே
சிறியே னிருக்கை பெருஞ்சிறையே. (எஉ)

மடக்கு.

இக்கந் தனுக்கு நிகரானே
யிசைந்து வாழ்வ தாலெனவு
மிக்கந் தனுக்கு நிகராவென்
றிசைத்த திருவம் புயத்தாலென்

றெக்கு வலைய மும்புகழு
மெங்கோன் செயநா கய்யதுரை
யெய்தும் பவனி தனைப்பார்த்தே
னெல்லை யடுத்த பூதரமே

மிக்க கலையைப் பாயசமே
வேம்பா மெனக்குப் பாயசமே
விண்ணூர்ந் திருக்கு மோராரே
மேவச் சிறிது மோராரே

நிற்கும் புனித மாதவனே
நிலவா னதுவு மாதவனே
நீண்டு படரு மென்பிறப்பே
நினைக்கிற் கொடிதா மென்பிறப்பே. (எ௩)

மடக்கு.

அனங்க னகமுந் தருந்துரையே
யனங்க னகமுந் தணியாயோ
வாழி தரித்த கையாநீ
யாழி தனையு மடக்காயோ
தினங்கந் தனையே பணிந்துவருஞ்
செயனே புகழ்நா கய்யதனஞ்
செயனே யெனவு நின்றுதெரி
சித்தே னுயர்ந்த பூதரமே
யினங்கை வளையைக் கண்டேனே
யினிக்கு திலையே கண்டேனே
விரைக்கு நீரைக் கண்டேனே
வேந்தல் கலவிக் கண்டேனே
மனந்தா னெருபா னிலையாதே
மாதர் தமக்கே னிலையாதே
மணஞ்சேர் களபம் பூசலையே
மாதா விளைத்தாள் பூசலையே. (எச)

மடக்கு.

வாசித் தியாகர் தெரிந்தவர்க்கு
வாசித் தியாகர் தந்தருளி
வல்லார் தனத்தா ருடன்கூடி
வல்லார் தனத்தா ருடன்கூடி.

நேசித் தளகா புரிபோலு
நிறைந்த மருதூர் தனைப்புரக்கு
நிருபன் செயநா கய்யதுரை
நெஞ்ச மகிழும் பூதரமே

தேசுற் றெழுந்து வந்தாயே
சினக்கு மீன்ற வந்தாயே
சிலையாய் வளர்ந்து நிற்பாயே
தேடே னிரவி னிற்பாயே

யாசற் றெவையும் பொறுத்தாயே
யடியேன் பாலன் பொறுத்தாயே
யகில்வா சனையுண் டாக்கினையே
யனையா ததுந்தா யாக்கினையே. (எரு)

பாட்டுடைத்தலைவன் புயத்துக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

மடக்கு.

அவனி தாங்கி மஞ்சரியு
மணியாய் விளங்கிச் செந்தேம
லடுத்து மருப்பங் கயமாவு
மழகாய் வசிக்கத் திரண்டெழுந்து
திவளு முயர்ந்த பூதரமே
செங்கோல் செலுத்தித் தென்மருதூர்
செழிக்க வரசு புரியுமனத்
திடவா னென்றுஞ் சொன்னமொழி
தவறி டாத சத்தியவா
சகத்தான் செயகா கய்யதுரைச்
சாமி யுனைப்போ லிருபுயமுந்
தானே துலங்கத் தந்தியின்மேற்
பவனி வரயான் கண்டுவிரும்
பவனி தையருந் தாயுதிறம்
பவனி யாயஞ் செயமதனென்
பவனி கலுமே புரிந்தானே. (எசு)

மடக்கு.

காவுக் கிசைந்த கையனென்றுங்
கருணைக் கிசைந்த கண்ணனென்றுங்
கலைக்கே யிசைந்த கருத்தனென்றுங்
கடல்சூ ழுலகிற் கவிஞர்சொல்லும்
பாவுக் கிசைந்த புண்ணியவான்
பலர்க்கு மிசைந்த கண்ணியவான்
பந்துக் கிசைந்த முலைமாதர்
பார்வைக் கிசைந்த ரூபமதன்
பூவுக் கிசைந்த மன்னரெலாம்
புகழ்தற் கிசைந்த கீர்த்தியினன்
பூமான் செயரா கய்யதுரை
புயம்போல் வளர்ந்த பூதரமே
தாவிப் படிக்கு முயலேவே
தாவிப் படிக்கு மெனவகுத்தான்
றருவாய் முளைத்த வகிலேயித்
தருவாய் கிருபை தருவாயே. (எஎ

மடக்கு.

மருவ லாரைப் பிடித்திழுத்து
மண்ணில் வீழ்த்தி யவர்சிரத்தை
மணிமா மகுடத் தொடுமிடறி
வரும்வா ரணத்துக் காதிபனுந்
தருவன் முனம்பாண் டவர்க்காகத்
தூரியோ தனமன் னவன்பாலிற்
றாது நடந்த நாயகவுத்
துங்கன் மகிழும் பூதரமே
பெருகி வளருங் கலைமதியாற்
பேதை யேனுக் கலைமதியாம்
பின்னு மொழிய வென்கால்கள்
பின்னு மொழிய வாயுளதோ
வருமா தென்றல் வருத்துதென்றல்
வசையாஞ் செவிக்கம் பேயசையா
மணியு மாவி குலையாலு
மாவி குழையுங் கண்டாயே. (எஅ)

பின் கடை மடக்கு.

மேடை மேற்கட் டியகொடிகள்
விண்ணுட் டரம்பை மங்கையர்க்கு
வேண்டும் பாதம் பயிற்றுவிக்கு
மேலோர் சிலரங் கவரெதிர்கைச்
சாடை காட்டு மபிநயம்போற்
றருவூ டுலவுந் தென்மருதூர்த்
தனவான் செயநா கய்யதுரைச்
சாமி மகிழும் பூதரமே
நீடு குறவர் நம்பகமே
நீரே தருமென் னம்பகமே
நெடிதாய் வளர்ந்த வருங்காவே
நேரே யந்தி வருங்காவே
வாடை காட்டு மாரங்களே
மார்பிற் புனையே ணரங்களே
வாய்ந்த சுனையி னவராலே
மையல் படைத்தே னவராலே. (எகூ)

சதுரகிரியின் குணமறியாத தலைவி அதனிடத்துச்சொல்லிய
தனதழிவின்மையைக் குறித்து வருந்தல்.

மதியங் காயம் பெற்றலையும்
வனச மழைக்கு ணணைந்திருக்கு
மண்ணி லினியீ டில்லையென்று
மதிக்கும் வதனத் தானுலகின்
முதிருஞ் சுவைசேர் தமிழருமை
முழுதுந் தெரிந்த கட்டாரி
முகினு கய்ய சாமிதிரு
முகுந்தன் மகிழும் பூதரமே
துதிசேர் தலைவன் காயமமால்
சொல்லு நீயுங் காமயமால்
தோன்றச் செயலா னீயும்வெகு
துணிவா யிருந்தா யஃதறியா
ததிமா மயலின் மயக்கத்தா
லல்லும் பகலு முன்னிடத்தி
லருமை யாய்கா னுரைத்தவெலா
மடடா வெனது பேதமையே. (அ0)

மடக்கு.

துதிக்கா மையனு நன்மையலாற்

றுடங்கா மையனும் வழங்குவதிற்

சுரர்கா மையனுன் றென்மருதூர்த்

துரைகா மையனுங் கட்டாரி

யுதிக்கும் படிநா கையன்படைத்த

வுலகின் மதனு கையன்சரத

முரைக்கு நாகை யம்புயம்போ

லுற்ற நாகை யன்றனது

மதிக்கும் புயத்தைப் போனகமே

மலரா சுகந்தூர்ப் போனகமே

மடங்கா தருந்தேன் போனகமே

வரிக்கண் சொரிந்து போனகமே

நதிக்கும் பெரிதப் பாராவே

நலியச் செயுங்கண் பாராவே

நங்கை யருக்கன் பாராவே

நற்றுய் வாயிற் பாராவே. (அக)

தூது.

தோகை மயில்வா கனன்பதத்தைத்

துதித்து மருதூர் தனைப்புரக்குஞ்

சுகநா கயகா மயவிசைய

துங்க னிடத்தி லினிதாக

மேக மதனைத் தூதுசெல்ல

விடுத்தால் வேந்தன் றருங்கொடைக்கி

வெள்கிக் கறுத்துப் பயமடைந்து

விரைந்து செலவு மாட்டாதே

தேக மில்லயே தென்றறனைத்

தேடித் தூது விடுக்கவென்றாற்

செவ்வாய்க் கிளியை விடுப்பமெனிற்

செவ்வா யிருந்து மங்குளறும்

பாக மிசைந்த வண்டுமது

பான வெறியாற் கூறுது

பகரு மனத்தை விடுப்பமென்றாற்

பலவே தனையு முடையதுவே. (அ௨)

இதுவுமது.

மடக்கு.

மேவு மயிலைத் தூதுவிட்டான்
மிகுங்*க லாப முடையதென்பார்
விரும்பு மனமோ வெனிலவனை
விட்டு வரவுங் காணேமென்
றுரவ னுடனே நானிருந்தே
னப்போ தெதிரே நீதானே
யருமை யாக வெழுந்ததுபோ
லடியா ளுயிரின் கொழுந்ததுபோற்
பாவ லோரும் புகழ்ந்திடும்விற்
பனன்கட் டாரி நாகயமால்
பாரப் புயத்திற் சேர்வதற்குப்
பருவங் கிடைக்க மதன்சடைக்கப்
பூவை முடித்த குழலுடையோர்
பூவை யெதிர்ந்தாள் பூதரமே
புனிதம் பார்த்தேன் மன்மதனம்
புதிதம் பாரேன் கண்டாயே. (அங)

* கலாபம்—கலகம்.

தலைவி சதுரகிரியைப் பார்த்து தன்னிடத்தடைந்த
பெண்ணும் நீயும் ஒன்றென்றுரைத்தல்.

மேகங் குழலாய் மான்விழியாய்
விளங்கு நாசி குமிழாக
வீழி யிதழாய்ப் பன் முருந்தாய்
விளம்பு மொழியே கனியாக
மோகந் தருமா முகமதியாய்
மூங்கி லிருதோள் காந்தள்கையாய்
முலையா னையதாய்க் கொடியிடையாய்
மூடு நிதம்பந் தேன்கூடாய்த்
தேகந் தளிராய்ப் பசுந்தோகை
சேர்ந்த மயிலே சாயலதாய்த்
திகழும் பிடியே நடையாகத்
தெய்வேந் திரன்போற் பூவுலகில்
யோகம் பெருகுங் கட்டாரி
யுயர்நா கயகா மயமகிப
அற்ற சமுகங் காணவந்தா
ளென்னைப்போ லிருந்தாள் பூதரமே. (அச)

இலங்கு மலையே யுன்போலென்
    னெதிர்வந் தவளை நான்பார்த்தே
    னிசைக்கும் வார்த்தை யிசைக்குழலென்
    றெண்ணி மகிழ்ந்தே னவளெனைநீ
கலங்க லடைவா னெனவதற்கிங்
    கலங்க லருள்வா ரிலையென்றேன்
    காதிற் கேட்ட வுடனுருகிக்
    கலங்கா திருவென் றுறுதிசொல்லி
யுலங்கொள் புயத்தான் மிதிலையில்வில்
    லொடித்துச் சனகி தனைமணந்த
    வுயர்நா கயகா மயதரும
    னுற்ற கொலுவிற் சென்றணுகி
நலங்கொ ளுனது பவனிகண்ட
    நங்கை பொதுமா தொருத்தியுன்ற
    னறையார் மாலை வேண்டுமென்று
    நவின்று ளெனச்சம் மதித்தானே. (அரு)

தலைவன் புரிந்த தண்ணருள் கூறல்.

மலைவா யிருந்தா ளந்தமட

மாதென் றுரைப்ப மாலைமுத்து

மாலை கொடுத்தா னதைவாங்கி

மகிழ்ந்து தூது மாதுவந்து

சிலையை மிதித்துப் பெண்ணாகச்

செய்த சரணும் புயத்தழகன்

செயநா கயகா மய்யதுரைச்

செல்வன் கொடுத்தா னெனக்கொடுத்தா

டலைமேல் வைத்து விழியி லொத்திச்

சந்தி ரோதயம்போ லெழுந்தகும்பத்

தனத்தி லணிந்து கலைகலனுந்

தானே திருத்தி மனைக்குள்வந்து

நலமா யிருந்தேன் மன்மதன்வின்

னாணை யிறக்கிச் சமரொழித்து

நடந்தான் றுயின்றே னக்கணமென்

னுதன் வரவும் பார்த்தேனே. (அசு)

## தலைவியினது கனவிற் றோன்றிய தலைவன் செய்கைவளங் கூறல்.

என்றன் கனவில் வந்ததுரை
யெடுத்து மடியி லிருத்தியவ
னிருகை யாலுங் குழலைவகுப்
பெடுத்து முடித்து மலர்சூட்டிச்
சந்த முலையிற் பூசி நெற்றி
தன்னிற் றிலகந் தீட்டிமுகந்
தனையும் பார்த்து மகிழ்ந்துமுலை
தனையும் பிடித்து முத்தமிட்டு
முந்து சுருள்கள் பகுந்துமுக
முகத்தோ டணைத்து மார்பணைத்து
முதுகைத் தடவிக் கொடுத்துமணி
முறுவல் புரிந்தா னயக்காரன்
விந்த வரைபோற் புயத்தழகன்
விறற்கட் டாரி நாகயவில்
வேந்தன் கலவி முழுதும்வகை
விபர மினிக்கேள் பூதரமே. (அஎ)

## தலைவி தலைவனிடத்துக் கலைவி விஷயங்கூறல்.

### மடக்கு.

கனிவா யமுதம் பருகிமுத்தங்
கனிவா யருளித் திரண்டெழுந்த
கனக வரைமா முலையிலிலங்
கநக வரைதோன் றப்பதித்தே
யினிய வாச கமுங்கூறி
யினிய வாவுந் தீர்ந்திடவே
யென்னை மருவிப் புணராத
தென்னை யுரையா யென்றேவந்
தனையும் புரிந்து மன்னவுன்
றனையு நானு விடுவேனோ
சரச மான விழியார்க்குச்
சரச மான வனுநீயே
யெனவே செயநா கய்யதுரை
யிந்தி ரனையே நானுரைத்தே
னெல்லா யிருந்த மதிக்கிரனை
மெல்லாங் குளிரக் கண்டேனே. (அஅ)

இதுவுமது.

மடக்கு.

கொங்கை பிடித்தே யதிலிருக்குங்
கொங்கை முகந்து மலரிதழாங்
குளத்தை யினிதா யுவந்துபரு
குளத்தை மகிழச் செய்மருங்கி
னங்கம் புயக்கை யாற்றொடுநா
னங்கம் புளகம் படைப்பேன்பின்
னணைவா யழைத்துப் பாவசமா
யணைவா யென்னையுன் வாயாரத்
தங்கப் பாவா யென்றுனி
தங்கப் பாவா யமுதுதவிச்
சரசம் புரிவா யென்பேன்வேள்
சரசங் கடமுந் தீர்ந்திடுவேன்
றுங்க மதன கட்டாரித்
துரைநா கயகா மயநகுல
சமுகா வென்றே னவன்கலவித்
தொழிற்கெத் தனித்தான் பூதரமே. (அக)

## கலவிச் சிறப்புரைத்தல்.

### மடக்கு.

கலையை யவிழ்த்தா னென்மனமுங்
 கலைய ஈணித் தெளிந்தேன்கொங்
 கைத்தா மரையைப் பிடித்தேந
 கைத்தா னுனு முடனகைத்தேன்
சிலைநேர் புருவங் கோட்டியும்பஞ்
 சிலைநேர் விழியான் முகம்பார்த்தேன்
 திருவா வெனக்குன் செம்பவளத்
 திருவா யமுதங் கொடுவென்றே
தலையை வளைத்தான் சுவைத்தான்கா
 தலையே தணிப்பான் மனதுமுவந்
 தடுத்தே கலந்தா னுனதற்குத்
 தடுத்தே புகலச் சகிப்பேனே
மலையே யெதிர்த்த மருவார்கண்
 மலையே செயிர்த்த கட்டாரி
 வளர்கா கயகா மயசுமுகன்
 மருவச் சமயங் கிடைத்ததுவே. (௯௰)

இதுவுமது.

வேறு.

வனைர விக்கை தனைநெ கிழ்த்து
வஞ்ச மொட்டை நிகர்த னத்தில்
வளைவு பெற்ற நகம ழுத்தி
மருவ லர்க்கை கொடும லர்த்தி
யினிமை யுற்ற விதழ்சு வைத்தெ
னிருக னத்தி லிடடி முத்த
மெனவு ரைத்து வளைகி லுக்க
விருக டைக்க ணாதுசி வக்க
மனம கிழ்ச்சி பெறவ ணைத்து
மதிநி கர்த்த நுதல்வெ யர்க்க
மதன வித்தை யதனின் மெத்த
வகைபி றக்க மருவு சித்த
சனைநி கர்க்க வனுப வித்த
சாமி நாக யேந்தி ரமால்
தாக மோக மதுத வீர்த்த
சமய நல்ல சமயமே. (கூக)

இதுவுமது.

இடையி னிற்கை நகம முத்தி
யிசைவ ளைக்கு நிகர்க முத்தி
யினிய புட்கள் குரலெ முப்பி
யிருது டைக்கு மிடையு தித்த
கடித டத்தின் மணியி னுற்ற
காம முத்தி யமுது மிக்க
கடலு டைத்த பரிசெ னத்தி
கழவெ முப்பி முலைசு வைத்து
விடிய மட்டு முபரி வித்தை
விபரி தத்தை மிகந டத்தி
விரைமி குத்த மலர ணைக்குண்
மெலந கைத்து மனதி னுற்ற
தடைய றப்பி னனுப வித்த
சாமி நாக யேந்தி ரமால்
தாக மோக மதுத விர்த்த
சமய நல்ல சமயமே. (௧௨)

வேறு.

இவுதுமது.

பாட கங்க ளுங்கு லுங்க
வேச தங்கை யுங்கி லுக்கு
பான்மை கண்டு ளங்க னிந்து
பார மந்த ரங்க ளென்ற
நீடு மம்பு யங்க ளெங்கு
மாத னங்க ளும்பி துங்க
நேச விங்கி தம்பொ ருந்த
வூடல் கொண்ட துந்த விர்ந்து
மூடு கின்ற சங்கை யின்றி
வீரியங்க ளும்ப கர்ந்து
மோக ரஞ்சி தங்கி ளம்பி
யேமு யங்க வும்பு ணர்ந்து
தாட னங்க ளும்பு ரிந்து
சாமி நாக யேந்தி ரமால்
தாக மோக மதுத விர்த்த
சமய நல்ல சமயமே. (௧௩)

வேறு.

இதுவுமது.

முந்தி முந்தி மென்ற தம்ப
லம்ப குந்து தந்து சந்த
முந்தி மிர்ந்து கந்து கொஞ்சி
யுந்த குந்த பந்த யங்கள்
சந்தி கண்டி யம்பி யுங்கு
விந்தெ ழுந்து வந்த கொங்கை
சந்த்ர விம்ப மென்று மிஞ்சு
மந்த ரங்க ளென்று மின்று
சிந்தை யுங்க னிந்து வந்து
கொந்த லர்ந்த கொண்டைவண்டு
சென்றெ ழும்பி யும்ப றந்து
கொண்டொ துங்க வும்புணர்ந்து
தந்தி ரங்க ளுந்தெரிந்த
சாமி நாக யேந்தி ரமால்
தாக மோக மதுத விர்த்த
சமய நல்ல சமயமே (கூ௪)

வேறு.

இதுவுமது.

கன்னங் கரிய கூந்தலைத்தன்
கையால் வகிர்ந்து மொய்த்தமணங்
கமழு மாலை தான்முடித்துக்
கமல மலர்போன் முகந்துடைத்துச்
சின்னஞ் சிறிதாய்ச் சிந்தூரத்
திலதம் பணம்போ னுதலிலிட்டுச்
சேல்போல் விழிக்கி மையெழுதித்
தேகந் தடவி யுடைமை யெலா
முன்னந் தரித்த படிதரித்து
முலைக்கு மிடைக்குங் கலைசேர்த்து
முகில்கட் டாரி நாகயனென்
முகத்தை நோக்கி ஞன்சிரித்தேன்
றன்னம் புயத்தான் மின்னுரைத்
தழுவி யுருக்குஞ் சரசசம்பிர
தாய மவனுக் கல்லான்ம
தனவே ளுக்குந் தெரியாதே. (சகூ௫)

கலவிக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

சேர்ந்து கனிவாய்த் தேன்வழங்கித்
திலக மிளகு நயங்காட்டித்
திகழுங் கனத்தின் முத்தம்வைத்துத்
தெளிந்த மதியுந் தயங்கிவர
நேர்ந்த புடவை யகற்றிவைத்து
நிறைந்த பணிக ளசைந்தாடி
நிலக்கு மமளி மேலிலங்கி
நேரா யூட லும்பொருந்திக்
கூர்ந்து கயத்தி லானையிடுங்
குரல்கேட் டுருகிச் சென்றுநின்று
கொடுங்க ராவை வென்றுவந்த
குணமால் சகல கலைபுகன்றுத்
தேர்ந்து தெளிந்த கட்டாரி
திகழ்கா கயதி ரணைக்கலந்த
சிராய்த் தெரியு மலையேநான்
செப்பி யறிய வேண்டாமே. (கூகூ)

தலைவிக்கும் சதுரகிரிக்குஞ் சிலேடை.

திகழும் புனித வுடைதாங்கிச்
செய்ய ரவிக்கை தொட்டிலங்கிச்
செழுஞ்சிந் தூரமுந் தரித்திலகத்
திருவும் பிறையுந் தானடுத்து
மிகவு மாலை யேசுமந்து
விளங்கு முருகுங் கொப்புகளு
மின்னுங் குழையுஞ் செவிகாட்ட
மேன்மை யான வண்டுதுன்னப்
புகழும் பீலி மயிலடியும்
பொருந்திக் கடலை யடைத்திலங்கை
புரக்கும் வேந்தன் சிரங்கள்விழப்
போர்விற் குனித்துச் சரந்தொடுத்த
சுகமான் மருதூர்க் கட்டாரி
துரைநா யகமா மயவிசைய
துங்கன் வரையே யுன்போலென்
சொருபந் தெரியப் பார்த்தேனே. (௧௭)

## கடைத்திரிபு மடக்கு.

கனகாம் புயரே ரானனத்தான்
  கனமே பெருகுங் கட்டாரிக்
  காம யேந்த்ர நாகயவேள்
  கலவி புரிந்தா ஞனவனை
யினிதா கியசற் பாத்திரமே
  யென்று புரிந்தேன் தோத்திரமே
  யியல்பாய்க் காம சாத்திரமே
  யிதுவென் றுரைத்தான் சூத்திரமே
தினமே படைத்த வாத்திரமே
  தீர்ந்து குளிர்ந்தே னேத்திரமே
  திரண்ட முலையின் காத்திரமே
  தெரிந்து கொடுத்தான் சேத்திரமே
மனமே யுவந்த மாத்திரமே
  மையல் பகனட் சேத்திரமே
  மதன வேளெம் மாத்திரமே
  வழுத்தி னேன்கேள் கோத்திரமே. (கூஅ)

## கடைத்திரிபு மடக்கு.

காமப் பயலு மிடக்கயமே
கட்டிப் போருக் கிருட்கயமே
கடவிக் கணையாம் பங்கயமே
கடுந்து கொடுத்தா னெனக்கயமே
சோமக் கலையா னித்தியமே
தோழி மாரைத் துத்தியமே
சொன்னேன் மயனி மித்தியமே
சூழ்பொ யலவே சத்தியமே
நேமித் துடனே நிச்சயமே
நின்னு லேமி கச்சயமே
நிறைந்த தெனக்கே யதிசயமே
நிகழ்த்தி னேன்சி லோச்சயமே
பூமிக் கதிசி லாக்கியமே
பொருந்து மருதூர்க் கட்டாரிப்
புகழ்நா கயகா மயமதனன்
புணர்ந்தா னெனது பாக்கியமே. (கக)

## வாழி.

கத்தர் வாழி கருங்கடலங்
கத்தர் வாழி யயன்வாழி
கருதும் புவனம் வாழிநெடுங்
கடல்கள் வாழி புயல்வாழி
சித்தர் வாழி தமிழறிந்த
சித்தர் வாழி கதிர்வாழி
திங்கள் வாழி யிலிங்கயதே
சிகர்தாள் வாழி தெய்வமனப்
பத்தர் வாழி திருக்கேணிப்
பச்சை மலையப்பன் வாழி
பலரும் புகழ்பொன் னுங்கூடப்
பாவ லோனை மெச்சுகின்ற
முத்தர் புகழு நாகயமான்
முதல்வன் வாழி தென்மருதூர்
முற்றும் பூத ரவிலாசம்
முழுதும் வாழி வாழியவே. (ளா)

பூதரவிலாசம்
முற்றிற்று.

---

உ

சிவமயம்.

ஷண்முகநாதன் துணை.

# நாணிக்கண்புதைக்க வருந்தலும், வண்டோச்சி மருங்கணைதலும் பற்றிய ஒருதுறைக்கோவைகளின்

## காப்பு.

பூமேவு கோவைத் துறைகளு ணாணிக்கண் போற்றநுவன்
மாமேவு நூறு கவியும்வண் டோச்சி மருங்கணைந்த
தேமேவு நூறு கவியுங்க ளைசனைச் சிந்தைசெய்து
நாமேசொல் வாமரு தூராளு நாகய ராசனுக்கே.



உ

சிவமயம்.

ஷண்முகநாதன் துணை.

# நாணிக்கண்புதைக்க வருந்தல்.



## நூல்.

சீர்பூத்த மாமலர்ச் செல்வியும் பூத்துத் திகழுமுல்லைத்
தார்பூத்த திண்புயன் கட்டாரி நாகய சாமிவெற்பி
ரேர்பூத்த பூத ரவிலாச நீரரங் கேற்றியபோற்
பேர்பூத்த கோவையுந் தானரங் கேற்றுதல் பேரின்பமே. (க)

அணியாய் வழிவழி மைந்தருண்டாகி யரசுரிமை
தணியாத நாகய மால்வெற்பின் மாத்தருந் தன்மையிலீர்
பணியாரப் பொற்குடந் தன்னையென் பாற்றரப் பாக்கியமென்
றுணிவாயியற்றிநின்றேன்சொல்லுவீர்பசுந்தோகையரே. (உ)

சதிரேறி நல்லறந் தானேறி மன்னவர் தாங்குவித்த
நதி ரேறும் வாசற் செயநாக யேந்திர நாமன்வெற்பி
லெதிரே துலங்குமின் னேயோர் முகுர்த்தத்தி லேயிரண்டு
கதிரோ னுதித்து மலராத தென்ன கமலங்களே. (ங)

கூனேந்தும் வில்லினன் கும்பேந்து நல்லினன் குற்றமிலாத்
தேனேந்துஞ் சொல்லினன் கட்டாரி நாகய தீரன்வெற்பீர்
மானேந்தி மாதங்கங் காட்டுவதார் வெள்ளி மால்வரையார்
தானே யுமக்கித் தொழிலே தெவண் கற்ற தந்திரமே (ச)

படுக்கையின் போது மிருக்கையின் போதும்பன் னூற்பசும்
மடுக்குந னுவினன் கட்டாரி நாகய மன்னன்வெற்பி [பான்
ருடுக்கையுந் தாங்கிய கையான் சடையினு மும்மிடத்துங்
கடுக்கையு நாகமுங் கண்டோமற் றெங்கணுங் காண்கிலமே ()

மண்கட்டும் வேந்தர்முன் மாமிது லேசன்வில் வாங்கியொரு
பெண்கட்டு மாலெங்க ணுகய ராச கம்பீர துரை
விண்கட்டுஞ் சென்னி வரையி ரதிசய மேலிட்டதாங்
கண்கட்டு வித்தையிற் பூமா துவதனங் காட்டியதே (சு)

குருகோ கனகப் பதம்போற்று நாகய கும்பன் வெற்பின்
முருகோன் றனக்குமுன் வந்த விநாயக மூர்த்திதமக்
கொருகோடு காட்டிய தாலோ தும்பிக்கையொன் றுள்ளதுமக்
கிருகோடு காட்டிய தாலோ விரண்டுள தேந்திழையே. (எ)

மாமாங்கம் பொங்கி வருவது போன்மற்ற மற்றமன்னர்
தாமாங்கு வந்து தொழும்பாத நாகய சாமிவெற்பிற்
பூமாங் குயிலனை யிர்புவி மீதுமைப் போற்றுணிவுற்
ருமாங் குழையின்றி வைப்பர்க ளோகும்ப மந்தணரே. (அ)

அலையிர் ததிரக் கடலூடு கட்டுதற் காகமுன்பு
சிலையிந்த மாருதி மேலா னருள்பெற்றுச்செம்பொனம்பொற்
கலையிந்து வாணரைக் காக்கின்ற நாகய காமன்வெற்பீர்
வலையிந்து மீனைத் தடுத்தீ ரிதுவென்ன வஞ்சகமே. (கூ)

திருவேலை யிற்பள்ளி கொண்டவன் சேவடி சேவிப்பதே
பெருவேலை யாக்கொண்ட நாகய ராசன் பிறங்கனல்லி
ரொருவேலை யேந்திவெற் பொன்றெறிந்தானெனன்ப தோர்ந்து கொண்டோ
விருவேலை யேந்தி யெறிந்திர் வரைக ளிரண்டினையே. (ய)

தென்பாய்த் திகழ்மரு தூராளு நாகய தீரதுரை
தன்பால ஞகய மால்வெற்பி லேபர தற்கிணையா
யன்பாய்த் தரணியைப் பார்த்துநின் றேன்றிரு வாழியைநான்
முன்பாகக் கண்டு மகிழ்வதெப் போதினிமொய்குழலே. (யக)

புத்திக்கி யூகி நளனீதிக் கன்பொடு போற்றுமனப்
பத்திக்கு மார்க்கண்டன் கட்டாரி நாகய பாண்டியன்வெற்பி
லத்திக்கு மிச்சிக்கு மாதுக்கு மேனிற்கு மாவரைமேற்
றொத்திப் படருமென் செந்தா மரைகுயிற் றாமொழியே. ()

ஒருவாளஞ் சுற்றிய நேமிக்கு ளாணை யுறச்செலுத்தி
வருவான் புகழ்ப்பெறுங் கட்டாரி நாகய மன்னன்வெற்பி
அருவாய் விளங்கிய மங்கையர் யாவர்க்கு மோரரசே
திருவாலங் காட்டிற் பரங்குன்று தோன்றல் சிறப்புறுமே. ()

ஆவியொப் பாயெனைக் காவென் றுவல்லக்கொண்டம்மனையுந்
தேவியைப் போற்றுந் துரைநாக யேந்திர நிரன்வெற்பிற்
காவியங் கைக்கொன் டிலக்கண மாவிண்டு காட்டியதா
னீவிரும் பாவலர் தாமுமொன் றுயது நேரிழையே. (யச)

சங்கோதை பொங்கச் சமரிலொன் னார்களைத் தாக்கிவரு
நங்கோன் பெரும்புகழ்க் கட்டாரி நாகய ராசன்வெற்பிற்
செங்கோல்கைக் கொள்ளக் குடிதாங்க மாதனஞ் சேரக்கண்
[டோம்
பங்கே ருகமுகத் திர்நீரும் வேந்தரும் பார்க்கிலொன்றே. ()

பொனைக்காட்டும் வாகன் புயல்காட்டுந் தேகன் புவியளந்த
தனைக்காட்டுஞ் சிந்தையன் கட்டாரி நாகய சாமிவெற்பின்
மினைக்காட்டுஞ் சிற்றிடை மெல்விரல் லாயிந்த வேளைவெய்ய
வனைக்காட்டி வந்தனம் பண்ணவொட் டாமன் மறைத்த
[தென்னே. (௰௬)

சீலந் தளிர்த்த புலவோர் தமக்குத் தினமுமனு
கூலந் தளிர்க்கச் செயுநாக யேந்திரன் கோலவெற்பி
னீலந் தளிர்த்த குழலீர் புதுமை நிகழ்த்தரிதா
யாலந் தளிர்பற்றி நிற்கக்கண் டோமிரண் டத்தியையே. (௰௭)

சந்தார் தடம்புயன் கட்டாரி நாகய சாமிவெற்பின்
முந்தாதி ராசிக்கு நாலா மிடமிட்ட முன்கைநல்லா
யிந்தார் சடையினன் வாகன ராசி யிடத்திலுக்கி
சைந்தா மிடந்தனைக் கண்டோம் பதினென் றறிந்திலமே. ()

வெவ்விய ராக்கதர் கோமான்கம் பத்தும் விழும்படிக்கே
யொவ்விய வாளிகண் முன்பேவு நாகய யோகன்வெற்பீர்
செவ்விய கோயி றனைத்திறந் தேதரி சிப்பதற்குப்
பவ்விய மாக விலிங்கத்தைக் காட்டல் பயனுமக்கே. (௰௯)

கொன்னேரும்வேற்கையன் கட்டாரி நாகயகும்பன்வெற்பின்
முன்னே யிரண்டு தனிக்கஞ்ச மாங்கு முளைத்திருக்கப்
பொன்னே யொருகஞ்ச மேலிரு நீலமும் பூத்ததின்மேற்
பின்னே யிரண்டுசெங் காந்தளும் பூத்ததைப் பேசரிதே. ()

தேரார்ந்து செய்ய திருமக ளார்ந்து திகழுமரு
தூராளுங் காமய நாகய மால்வெற்பி னெண்டொடியீர்
காராரு மைவரை கண்பார்த்தி லோம்பொதி கைவரையுஞ்
சீரா யறிந்திலங் கண்டோம் வடமலை தென்மலையே. (உக

வெம்போர் விளைத்த கரனாதி மூவரை வென்றுலகி
னம்போல் பவரைப் புரக்கின்ற நாகய ராசன்வெற்பிற்
கும்போ தயஞ்செய்து முந்நீர் தனையுங்கைக் கொண்டதனு
லம்போ ருகத்திரு வேலீவி ராகு மகத்தியனே. (உஉ)

கலையே தெரிந்தவர் தங்கட்கு நாடுங் கயக்கன்றுமே
மலையா தளிக்கின்ற கட்டாரி நாகய மன்னன்வெற்பீர்
முலையேவி நீர்முழு நீலந்தொட்டெரிந்த மொய்ம்பதனாற்
சிலைவேளு நீவிரு மொன்றென்றி யாவருஞ் செப்புவரே. ()

மெய்க்கண்டு போலத்தித் திப்பாய்க் கவிசொலும் வித்வசன
ரைக்கண்டு மெச்சுந் துரைநாக யேந்த்ர னணிவரையீர்
கைக்கண்ட நெல்லிக் கனிசார்ந்த தென்னக் கயிலைகண்டு
மைக்கண்டனைக்கண்டுபூரித்திலேனினிவாய்ப்பதென்றே.(உச)

மண்ணாளும் வேந்தருங் கல்விகற் றோர்களு மற்றவரு
நண்ணாரும் வாழ்த்திய கட்டாரி நாகய ராசன்வெற்பிற்
பெண்ணார் தமக்கொ ரரசாய் வடிவம் பெருகிநிற்பீர்
வண்ணானை யேனோ விடுத்திர்செம் மானை மறைத்துவைத்தே.

ஆதியி லேதுரி யோதனன் பாலினி லவருக்காய்த்
தூதுசென் றோதிய கட்டாரி நாகய துங்கன்வெற்பின்
மாதுநல் லாய்முன் மறைவாக நெஞ்சினில் வைத்திருந்த
சூதுநன் றாய்வெளி யாச்சுது பார்த்திடிற் சொல்வதென்னே.()

நன்மே தினிக்குள் வளர்பூத ரங்கட்கு நாயகமாம்
பொன்மேரு வன்ன புயநாக யேந்திர பூமன்வெற்பின்
மென்மேலு மாசை தருமடவீ ரென்ன வேலைசெய்திர்
கன்மேலி டாமற் கடலிலிட் டீரக் கரந்தன்னையே. (உஎ)

மிடல்காட்டு மங்கர் பதியைமுன் னாளில் வெகுண்டு வெகுண்
டடல்காட்டி வென்றவன் கட்டாரி நாகய வய்யன்வெற்பின்
மடல்காட்டுங் கூந்த லுடையீர் மனது மகிழ்ந்துநம்பாற்
கடல்காட்டி மந்தரங் தந்தா லமுதங் கடையநன்றே. (உஅ)

மனந்தந்து போற்றும் விசுவாசப் பாண்ட வருக்குவெற்றி
முனந்தந்து காத்ததுரைநாக யேந்திரன் மூரிவெற்பிற்
கனந்தந்து நீண்டு நெரியார்ந்து வாய்ந்த கருங்குழலீர்
தனந்தந்து தாரை தராதிருந் திரென்ன தானமிதே. (உகூ)

பொருவே லரக்கரை வெல்லவ யோத்திமன் புத்திரனு
வருவேனென் றும்பருக் கோதிய நாகய மன்னன்வெற்பிற்
றிருவேசெந் தாமரை யத்தியிற் பூத்துத் திகழ்கின்றதுன்
கருவே லிடத்தினிற் செங்காந்தள் பூத்தது காரணமே. (௩௰)

நஞ்சம்வைத் தோங்கிய கண்டர்பொற் பாத நளினமிசை
நெஞ்சம்வைத் தேதொழுங் கட்டாரி நாகய நேசன் வெற்பில்
*வஞ்சம்வைத் தீர்கல கங்காட்டி னீரிந்த வன்மையினுன்
மிஞ்சிய மாற்றலர் நீரன்றி வேறில்லை மெல்லியலே. (௩௧)

அம்புவி மீதி லறமே செயமென் றறுதினமு
நம்பிய நாகய கம்பீரன் வெற்பினி னல்லதங்கக்
கம்பியை நேருங் குணத்தீர்வன் னங்குசங் கைக்கொண்டிலீர்
தும்பியைக் கைவசமாக்கிநின் றீரென்ன சொல்லுவனே. (௩௨)

பண்டா தவற்குத் திகிரிபெய் தோனிரும் பாற்றளபத்
தண்டா ரணிந்த வரைப்புய நாகய சாமி வெற்பில்
வண்டாருங் கூந்தன் மடவீருங்கொங்கை மதியென்பதுங்
கண்டா மரையென் பதுவுமின் றேநிசங் கண்டனமே. (௩௩)

காண்பார் துயரக் கலியகன் றோடக் கனக்கநிதி
பூண்பா லனந்தருங் கட்டாரி நாகய பூபன்வெற்பீர்
மாண்பான சேலையங் கேயுமக் காமென்று வைத்துமற்றை
யாண்பாற் குரியவை சோமனென் றேவெற் களித்ததுவே. ()

---

* வஞ்சம்—வாள்.

அன்றோர் கணையினை யெழும ராவு மறத்தொடுத்து
நின்றோன் றுரையெங்கள் கட்டாரி நாகய நேசன்வெற்பி
லின்றோர்மை யாய்நல்ல வாளைக்கண்டேமனத்தின்புறல்போய்
நன்றோ சிரிய வரையான் றரிசித்த னன்னுதலே (ருகு)

பொருணு வலர்க்கு மறையோர்க்கு மீந்து புனிதகுலக்
குருநா தனைத்தொழுங் கட்டாரி நாகய கும்பன்வெற்பில்
வருநா ரியற்கு ளரசாய் விளங்கிய மங்கைநல்லா
*யருணை தயத்துக்கு முன்னு தவன்வந்த தற்புதமே (ருசு)

மித்திர மாக வடிவுகொண் டேவந்த மென்பிணையே
லத்திர மேவிய கட்டாரி நாகய வண்ணல் வெற்பீர்
புத்திர பாரம் பரையா யுமக்குண்டு புண்ணியங்கள்
சத்திரந் தன்னையின் றேதிறந் தோதனந் தந்திடிலே (ருஎ)

கூறுங் கவின்சிலைக் கட்டாரி நாகய கும்பன்வெற்பிற்
றேறுங் கரும்பி ரசமுமின் பாலமுத் திங்கனிக
டாறுங் கலந்த மொழியீர்நல் லாளியுந் தந்தியும்போன்
மாறுங் காம்பெறச் செய்தி ரிதுபுது மாதிரியே (ருஅ)

மற்கண்ட தோட்கஞ் சனைவெல்ல வேண்டி மகிழ்ந்திடைய
ரிற்கண்டு வாழ்ந்தவன் கட்டாரி நாகய வேந்தல்வெற்பில்
விற்கண்ட கோல நுதலீர்நற் றேனை விரும்புமென்பாற்
கற்கண்டு கொள்ளக் கொடுத்தி ரிதுவென்ன காரணமே (ருகூ)

---

* அருணம்—மான்.

ஏட்டவிர முல்லை மலர்மாலை யான்களி றெட்டுநிகர்
தாட்டிக வானெங்கள் கட்டாரி நாகய சாமிவெற்பின்
மாட்டீர்நற் பாசுபந் தைக்கொடுத் தேகு வளையிலுங்கை
போட்டீர் கொடுத்திலி ரிகையை நானென் புகலுவனே (௪௰)

யானே யுமக்குத் தருந்தாரு வாருமென் றுய்ந்தவரைத்
தானே யழைக்குந் துரைநாக யேந்திர சாமிவெற்பின்
மானேநற் பால்வண்ண லிங்கத்தை யாங்கண்டு வாழ்த்திநின்
[றேங்
தேனே கிடைத்ததென் றுலபி ஷேகமுஞ் செய்பநன்றே (௪௧)

எங்களை யாள்வதற் குன்னைபல் லாவில்லை யென்றுபுவ
னங்கள்கொண் டாடிய நாகய மால்வெற்பி னன்முகமோர்
திங்களன் னீரெங்கண் முன்னேயக் காளைச்சிமிழில்வைத்தேன்
றங்கையை வேலையிற் றள்ளிநின் றீர்பழி தானிதுவே (௪௨)

நந்தாருங் கையர் பழவூ ரழகர்தன் னல்லருளாற்
சந்தான மோங்கிய கட்டாரி நாகய சாமிவெற்பிற்
பந்தான மான மடவீருள் என்புடன் பத்திரத்தைத்
தந்தாற் சிவலிங்க பூசைசெய் வேனிசந் தானிதுவே (௪௩)

இப்படி யார்தரு வாரென்று வேந்தர்க ளெண்ணவரி
சிப்படி யீயுந் துரைநாக யேந்திரன் றின்சிலம்பின்
மைப்படி கூந்தன் மடவீரென் னுள்ள மகிழ்ச்சியுறச்
செப்படி காட்டிநின் றீர்நோக்கு வித்தைசெய் தீரில்லையே ()

வீரங்கள் பேசிச் சமராட வந்து வெகுண்டமரு
வாரங்க முற்றுங் கணையாக்கு நாகய மன்னன்வெற்பீர்
சாரங்க மேந்தியுஞ் சக்கரங் காட்டியுஞ் சங்கிசைந்துஞ்
சீரங்க மேவியு மாலாய்நின் றீருங்கள் செய்கைநன்றே (சரு)

அருந்திய பாலின் பலத்தாலன் றூச்சிய ராடையெலாங்
குருந்தினி லேற்றிய நாகய மால்வரைக் கோகிலம்போற்
றிருந்தியமென்மொழிமானே பயோதரச்சேர்க்கைகண்டோம்
பொருந்திய தாரைகண் டாலல்ல வாவுடல் பூரிக்குமே (சசு)

வின்னுணே யேற்றிக் கொடுங்கூர்ப் பகழியை விட்டெதிர்த்த
வொன்னார் மகுட முடிதூள் படப்பொரு துள்ளமகி
ழ்ன்னுக யேந்திரன் வெற்பீர் வலையர்க ளாயிருந்துங்
கன்னு னறிந்தபின் னுடார்க ளானதென் காரணமே (சஎ)

நம்புந் துரையெங்கள் கட்டாரிக் காமய நாகயவேள்
பைம்பொன் சிலம்பின் மடவீ ரெதிர்த்துப் பகைத்தமத
னம்புஞ் சிலையுங்கைப் பற்றிநின் றீரது வன்றியவன்
செம்பொற் கிரீடத்தை யுந்தள்ளி நீரென்ன தீர்க்கமிதே ()

சுரும்பான நாணிற்கு நாணிய போலத் துவண்டசிலைக்
கரும்பானை ரூபத்தி னல்வென்ற நாகய காமன்வெற்பீ
ரரும்பாணி யாலன்று வெற்பாலி ராம னடைத்தனனீ
ரிரும்பாணி யாலடைத் தீரே கடலினை யிதரிதே (சகூ)

பாவேண்டு மட்டும் புகல்வீ ருமக்குநற் பால்கறக்கு
மாவேண்டு மாபணி யாநிதி யாவிவை யத்தனையு
மேவேண்டு மாசொ லு மென்றீயு நாகய வேந்தல்வெற்பீர்
மாவேண்டி யிங்குவந் தேன்கொடுத் தீர்பெரு வாரணமே ()

பனியிருந் தோங்கும் வரைமகட் போற்றியிப் பார்முழுது
நனியிருந் தாண்டு வருநாக யேந்திர னற்சிலம்பி
ரினிதிருந் துங்கைப்பையேற்பாரைப்போலு மெலுமிச்சையின்
கனியிருந் துங்கையை வைத்ததென் னேவுங்கள் கண்ணி
[ணைக்கே (௫௧)

பின்னே வருகின்ற காரியமி யாவையும் பேதமற
முன்னே தெரிந்து சொலுநாக யேந்திரன் மூரிவெற்பின்
மின்னேயத் தந்தனை வள்ளத்தி லேற்றி விடாமலிஃ
தென்னே சமுத்திரந் தன்னிலிட் டீரென் றெடுப்பதுவே ()

பேரிகை சங்கு தவின்மா முரசம் பெருந்தகொம்பு
பூரிகை யார்க்குந் திருவாயி லுகய பூமன்வெற்பிற்
காரிகை யிருங்கண்மாதங்கப்பார்வையிற் கண்டுகொண்டோம்
வாரியிங் கேயெமக் கிந்தா லதிக மகிழ்ச்சியுண்டே (௫௩)

கதையால் விளங்குஞ் சதாசிவ மூர்த்தியைக் காலமெலா
மிதையா சனத்தி லிருத்திய நாகய வேந்தல்வெற்பிற்
சிதையாத சிந்தை யுடையீ ருமது திறமையென்னு
மதயானை தோன்றிட மூடிநின் றீர்திட்டி வாசலிலே (௫௪)

பாட்டியல் கண்டு சுதிகூட்டி வீணையைப் பக்குவமா
மீட்டிய நாகய வேள்பூ தரத்தகின் மென்புகையை
யூட்டியகூந்தன் மடவீரென்முன்பினிலொன்றையொன்றைக்
காட்டி மறைக்குந் தொழிலான தெங்ஙனங் கற்றதுவே (௫௫)

இம்மா நிலமுற்று மோர்குடைக் கிழர செய்திநிற்குஞ்
சிம்மாத னாதி பதிநாக யேந்திரன் றிண்சிலம்பீர்
பம்மா தடிக்கடி நன்று பெழும்பிய பந்துதந்தி
ரம்மானை யுங்கொடுத் தாலல்ல வாவினை யாடநன்றே (௫௬)

கடத்தட வாரணன் குந்திலி வாசியன் கல்வியெலாந்
திடத்துடன் கற்றுணர் கட்டாரி நாகய தீரன்வெற்பிற்
படத்தர வல்குலும் வெண்மூ ரலும்பெற்ற பான்மொழியீர்
குடத்தன மீந்துகட் கொண்டீ ரிதுவென்ன *கோரணியே ()

நன்னெஞ்ச னாகிய கட்டாரிக் காமய நாகயவிற்
பன்னன் செயப்பெறு மாதிரத் தீரென் பகர்ந்துமென்னை
யின்னஞ் செழுங்கடைக் கண்பார்த் திடாம லிரக்கமிலாக்
கன்னெஞ்ச ராகநிற் கின்றீ ருமது கருணையென்னே (௫௮)

ஆர்ப்பாடம் பண்ணி யெதிர்த்தாரை வெல்லு மருச்சுனற்குத்
தேர்ப்பாக னாகிய கட்டாரி நாகய தீரன்வெற்பில்
வார்ப்பான பொற்சிலை யாவிபெற் றுலெனு மாணிழையீர்
பார்ப்பாரென் றெண்ணிக் குயவரை யாங்கண்ட பண்புநன்றே

---

* கோரணி—கோளாறு.

வெயிலார் கிரீடத் தடையல ருனுண்டு வெற்றிதந்த
வயிலார் கரத்தினன் கட்டாரி நாகய வையன்வெற்பி
ரொயிலாயமேருவைக்கண்டுகொண்டேன்மனதுள்ளுவந்தேன்
கயிலாய மானதைக் காணு நினைப்பென் கருத்திலுண்டே ()

இனமா னவரந் தனர்பா வலர்க ளிவரையெலாந்
தினமா தரிக்குந் துரைநாக யேந்திர திரன்வெற்பீர்
கனமான வண்ணம் படைத்துநற் பிலியுங் காட்டுதலா
னினைமா மயிலென்றி யாவருங் கூறுத னிச்சயமே (கூக)

கூனைத் தொடர்ந்த பிறைபோ லெயிற்றுக் கொடியவஞ்ச
ரூனைத் தொடர்ந்த வடிவேற்கை நாகய யோகன்வெற்பீர்
மானைத் தொடர்ந்து மதுகரங் கூடி மருவியதூஉ
மானைச் சிறுகன் றுதித்ததும் பார்க்கி லதிசயமே (கூஉ)

எச்சா ரியுஞ்சென் றுலாவிய வாசி யிருங்களிறு
ளச்சேறு தேரிவைக் காதிப னுகய வையன்வெற்பீர்
கச்சேறி யைக்கண்ட நாளெனச மானையுங் காணச்செய்து
வைச்சா லுமக்குண்டு பல்கோடி புண்ணிய மாணிழையே ()

ஓங்கிய கன்னன் கொடுத்தசெந் தாரையை யுள்ளுவந்து
வாங்கிய செங்கையன் கட்டாரி நாகய மன்னன்வெற்பீர்
தாங்குத லின்றி நிலைக்கோட்டை யின்றினி தாயறிந்தோ
மாங்குள பாரிச் சமீன்தாரை யாங்கண் டறிவதென்றே (கூச)

பாவிளங் கன்னி தனைமணஞ் சூட்டியிப் பாருலகி
லேவிளங் குந்துரை கட்டாரி நாகய வேந்தல்வெற்பீர்
கூவிளஞ் செங்கனி யிற்கஞ்சம் பூத்த குறிப்பறிந்தோ
மாவிளம் பிஞ்சு தளிர்பூத்து நின்றது மாமயிலே (௬௫)

பூமகள் வாழூர் திருமரு தூரைப் புரக்குமெங்கள்
காமய நாகய கட்டாரி வேந்தன் கனகிரிவாய்த்
தாமரை யால்வெற்பை யேந்தாமற் றுரை தடுத்துநின்றீர்
வாமன ரூப னறிந்தான் மகிழ்வன் மாதரசே (௬௬)

இத்தா ரணிக்கு ளறத்திற்கும் பூந்தமி ழென்பதற்கும்
வித்தா யுதித்த துரைநாக யேந்திரன் வெற்பினில்வா
சத்தா ரணிந்த மடவீரென் சொல்லுவன் றங்கைகொங்கை
யத்தானை நீக்கிவிட் டம்மானைக் கூடிய தற்புதமே (௬௭)

சூழிரு மாதவ முன்னு ளியற்றித் துரைத்தனநீ
டூழிய தாய்ச்செயுங் கட்டாரி நாகய யோகன்வெற்பீர்
வாழிய தான கதிரோனை யின்று மறைக்குமென்றே
வாழியை நீவிர் விடாதிருந் தீர்சொலு மாரணங்கே (௬௮)

அடத்தினைக் காட்டி வருஞ்சூர ருவிக் ககல்விசும்பி
னிடத்தினைக் காட்டிய கட்டாரி நாகய வேந்தல்வெற்பீர்
விடத்தினைக் காட்டத் தகாதென்று மூடி விரும்பியபாற்
குடத்தினை யேயெனக் கீந்திரு மதன்பு கூறிதே (௬௯)

அடுவேற் கரனெங்கள் கட்டாரி நாகய வற்புதவா
னுடுவேய்ந்த சென்னி வரையிர் விரகத்தி னுள்வினைக்குக்
கொடுவேலி யாந்தரச் சொன்னு லதனைக் கொடாதொழித்து
நடுவோ வுமக்கு மலைதாங்கி யீந்து நகைப்பதுவே (எ௰)

இரும்பான நெஞ்சரை வஞ்சரை நேசித் திடாதகன்ற
பெரும்பார் புரக்கின்ற நாகய ராசகம் பீரன்வெற்பி
லரும்பா னதைவிரி வாக்குமென் றேகொக்கி னந்தளிராற்
சுரும்பா னதைமறைத் தீரின்று நீண்ட சுரிகுழலே (எக)

தூண்டகு பாரப் புயனுங் கருணை சொலிக்கும்விழி
யாண்டகை யாமெங்கள் கட்டாரி நாகய வண்ணல்வெற்பிற்
பூண்டகு மன்னப் பெடையே நமக்கிது போதுமென்றே
காண்டகுசேலங்கைக்கொண்டுவிட்டீர்திண்டுக்கல்லினையே ()

தூதுளஞ் செய்ய கனிவாயின் வெண்ணிறத் தோகையைநா
மீதுளங் கூர்ந்து வளர்க்கின்ற நாகய வேந்தன்வெற்பீ
ரேதுளங் கூர்ந்தொரு மாம்பிஞ்சிற் பாதி யிடாதவர்நீர்
மாதுளங் கங்கனி தந்தீர் கொடையின் மகிமைநன்றே (எ௩)

அன்றி ரடியளந் தோரடி மாவலிக் காக்குவித்த
வன்றி ரனைத்தொழுங் கட்டாரி நாகய மன்னன்வெற்பீ
ரொன்றீர் குவலையத் தாராம லைவரை யும்விலக்கி
நின்றீரந் தத்துரி யோதன ராசனு நீவிருமே (எச)

பூமாது நின்று விளையாடு மார்பினன் பொங்குநிதிச்
சீமா னெனும்புகழ்க் கட்டாரி நாகயதீரன்வெற்பின்
மாமா தருக்குண் மடவன்ன மேபுல வர்க்கருமைக்
கோமா னைக்காண்கிற் றனமா னதுவுங்கை கூடுமின்றே (எரு)

பங்கயப் பெண்ணை னுமையாளுக் கண்ணான் பசிபவண்ணன்
பொங்கருட் கண்ணன் பதம்போற்று நாகய பூபன்வெற்பி
ரங்கயற் கண்ணம்மை பொற்று மரைக்கு ளமிழ்ந்தச்சொக்க
லிங்கமிங் கேவிம்மி நிற்கக்கண் டோமிவ் வியல்புநன்றே ()

இருநீ ரணிந்த சிவனுமஞ் சாற்றி யிராப்பகலாத்
திருநீ றணிந்திடுங் கட்டாரி நாகய தீரன்வெற்பீர்
வருநீர்க் குமிழியை முன்றானை கொண்டு மறைக்கரியீர்
பெருநீர்ப்பரவையைக்கையான்மறைத்திட்டபெற்றிநன்றே ()

பொருவாரு நம்பி வருவாரு மாசுகம் பூணவைப்பன்
திருவாரு மார்பினன் கட்டாரி நாகய தீரன்வெற்பி
*லொருவாரை யென்று முகந்தாய் மருவ வுதவியென்று
வருவாரை நீக்கி யிருந்தாரை புன்கை வசஞ்செய்ததே (எஅ)

எங்கே மருவல ரென்றுக் கிரமித் தெழுந்துபெருஞ்
சிங்கேறு போல்வருங் கட்டாரி நாகய தீரன்வெற்பி
ரங்கே விசாலித்த வம்பர மீதினி லத்தமுதித்
திங்கே பாணி யுதித்திடக் காட்டிய தென்சொல்வனே (எகூ)

---

*ஒருவாரை-விட்டு நீங்காதவரை (ஒருச்சினை).

செய்யம் படைத்த மருதூரி லேதருந் தேனுவைப்போற்
கையம் படைத்த துரைநாக யேந்திர காமன்வெற்பிற்
பையம் படைத்த வகலல்கு லீர்பொருப் பைப்படைத்து
வையம் படைத்துநின் றீர்நீவி ரெப்பிர மாசொனுமே (அ௰)

தருணா தருணந் தெரிந்தே யெவரையுந் தான்புரக்குங்
கருணா நிதியெங்கள் கட்டாரி நாகய காமன்வெற்பி
லிருணாடு கூந்தற் குயிலே யதிட்டத்தை யென்னசொல்வோ
மருணா சலங்கண்டி யாம்பெரு மானை யறிந்திலமே (அ௧)

இச்சகந் தன்னில் வரையா வையுமன் றிறகரிந்த
வச்சிரந் தாங்கிய கட்டாரி நாகப மன்னன்வெற்பி
ருச்சிதம் வாசிக்கு மாத்திரம் பார்த்தநி னுங்கள்செங்கை
யச்சரம் பார்க்க விலேயே யெமக்கிங் ககமகிழ்வே (அ௨)

முனஞ்சடை யாமற் றவஞ்செய்து பாரின் முடியரச
ரினஞ்சடை யாமற் றெழுமன்ன னாகி யிரவலர்க்குத்
தினஞ்சடை யாமற் கொடுக்கின்ற நாகய திரன்வெற்பீர்
மனஞ்சடை யாமற் றனந்தான மீந்திடில் வண்மைநன்றே ()

வடக்குங் குணக்கு மடுத்ததென் பாலும் வருணதிக்காங்
குடக்கும் புகழை நடாத்திய நாயக கும்பன்வெற்பி
லடக்குஞ் சரத்தை யறிந்தோமிப் போதிலப் போதிலங்கே
யடக்குஞ் சரத்தை யறிவதெப் போதினி யாரணங்கே (அச)

எண்டிசை போற்றிய கட்டாரி நாகய வேந்தல்வெற்பிற்
கண்டினை வார்த்தையிற் கண்டினை யேசெயுங் காரிகையீர்
செண்டினை யேந்திநின் ருல்லல வாகரஞ் சீர்பொருந்தும்
வண்டினை யேந்திய தாலென்ன மேன்மைகை மாமலர்க்கே ()

பராவிய வேந்தரைக் காத்துமற் றோரைப் பருவாத்தா
லராவிய தூளென வாக்கிய நாகய வண்ணல்வெற்பீர்
புராதனந் தன்னி னமக்கிது கேள்வியிப் போதுகண்டோ
மிராமனிங் கேகிற்க மாமா திலங்கைக்கு ளெய்தியதே (அரு)

பல்லங்கண் டேவி யரக்கர்கை காலவர் பன்னியர்வா
ழில்லங்கண் டேவிழச் செய்தரு ளாகய வேந்தல் வெற்பில்
வெல்லங்கண் டேயெனு மின்மொழி வா னுதன்மெல்லிநல்லீர்
வல்லங்கண் டேனந்த வங்காளம் பார்த்து மகிழ்ந்திலனே ()

பண்டே விடமுண்ட கண்டர்பொற் பாதப் பதுமமல
ருண்டே நமக்கென்று நம்பிய நாகய யோகன் வெற்பீர்
கண்டேன் பரம்பக் குடிகாண்கி லேனென் கமலமிசை
கண்டே னெதிர்ந்திடக் காணே னுமக்கிது கைகண்டதே ()

நம்பிறு மேலென் றளகேச னுரு நவிநிதிக்
கும்மனி னெங்கள் கட்டாரி நாகய கும்பன்வெற்பீ
ரம்மலை காட்டுந் தொழிலாலு மீனை யடக்கிநிற்கும்
பொம்மனி னுமிப் பூமாதி னெண்கலைபோன் றனையே (அக)

தண்ணங் கிடைத்த மொழிமாதர் கும்பத் தனத்திலணி
சுண்ணங் கிடைத்த புயநாக யேந்திர துங்கன்வெற்பில்
வண்ணங் கிடைத்த மயில்போலுஞ் சாயன் மடக்கொடியீர்
இன்னங் கிடைத்தது தேனைவிட்டா லுண்டு கெற்சிதமே ()

சும்மா வொருநொடிப் போதுமி ராதுகொன் னூல்பழகு
நம்மா தவன்புசழ்க் கட்டாரி நாகய ராசன்வெற்பி
லெம்மா லுரைக்கத் தகாதசொ ரூபத்தி னேந்திழையே
யம்மாகும் பத்தனங் கண்டோம்பின் காண்கிலமஞ்சனமே ()

மெய்யா னதுகிலந் தோய்ந்திட வீழ்ந்து மிகவணைக்கஞ்
செய்யாரை வேல்கொண் டடர்க்கின்ற நாகய திரன்வெற்பின்
மையார் குழற்றிரு மங்கைநல் லீர்தகு மாமலையைக்
கையாற் பிடித்துடன் றாபிவிட் டிருத்துங் கம்பெரிதே (கஉ

பட்சிக்கு மன்னக் குறைவின்றி யார்க்கும் படியளந்தி
ரட்சிக்கு மாலெங்கள் கட்டாரி நாகய ராசன்வெற்பி
லிச்சைக் கிசைந்த மடவீ ரமுத மிருக்கநம்பாற்
கச்சுக் கிடக்கு மிளநீர் கொடுத்த கருத்தென்னையே (கங)

சாத்திரங் கண்ட பெரியோர்க்கும் வேந்தர் தமக்குமகா
நேத்திரம் போல்பவன் கட்டாரி நாகய நேசன்வெற்பீர்
கோத்திரங் கண்டங் குலமறிந் தோம்பின்பு முன்பிருந்தாற்
கோத்திரங் காணும் படிக்கருள் வீர்மகிழ் கூர்ந்திடவே (கச)

நீணாகந் தாங்கிய மாநிலந் தாங்கி நிவந்தவிரு
தோணாக மோங்கிய நாகய மால்வரைத் தோகையர்க்குப்
பூணாக வுந்தில கம்போலு மேவிய பொற்கொடியிர்
காணாமற் கண்ட பொருளாய் விளங்குதல் கண்டனமே (௬௫,

பத்தர்கொண் டாடிய முன்னோ னழற்கட் படாதவெழிற்
சித்தச ணாகய மால்வெற்பிற் சேயிழை சேர்வதற்காம்
வித்தையன் றோகஞ்ச மென்முகை காட்டி விளங்குநய
நத்தையு மேந்தி யொருபொய்கை போனின்று நாணியதே ()

பங்கப்ப டாப்பங் கயம்போல் வதனன் பருத்தெழுந்த
துங்கப் புயாசலன் கட்டாரி நாகய நிரன்வெற்பிற்
சங்கைச்ச மானிக்கும் பொற்கழுத் தாய்மகத் தாகியவங்
கங்கைக்கு ளாகத் தனுக்கோடி யான்கண்ட காட்சிநன்றே ()

ஒருயாதின் முன்பு விழிக்கடங் காவெழி லோடிவர்ந்து
வருமானின் மேற்றனு வாங்கிய நாகய மன்னன்வெற்பீர்
திருமாவுங் காந்தனு மொன்றியொன் றாய்நிற்கச் சிந்தூரந்தா
னொருபா லொதுங்கவுங் கண்டோமி தெவ்வனவுற்பத்தியே ()

இரணியன் றன்னை நகத்தாற் பிளந்தவ னின்மகவைத்
தரணியிற் காத்த துரைநாக யேந்திர சாமிவெற்பிற்
கரணியைப் போல வளர்மடந் தாயொரு காற்கலிங்கப்
பரணியைப் பார்த்த கலம்பகம் பார்த்திலகண்ணிணையே (௬௬)

வரக்கயி லாச பதியரு ளால்வளஞ் சேர்மருதூர்
புரக்குந ளுகய மால்வரை யீரிங்குப் பொன்மலர்வா
யரக்கையுஞ் சாதிலிங் கத்தையுங் காட்டி யதன்பின்மற்றச்
சரக்கையுங் காட்டி வியாபாரி யாய்நின்ற தன்மைநன்றே (ர)

வாழியெந் நாளுநா ணிக்கண் புதைக்க வருந்துதுறை
வாழிவண் டோச்சி மருங்கணை கோவைய மாமருதூர்
வாழிம ளுகய வேளிந்த நூலை வழுத்தியவர்
வாழிய ரங்கேற் றியர்கேட் டவரும் வழிவழியே

நாணிக்கண்புதைக்கவருந்தல்பற்றிய
ஒருதுறைக்கோவை
முற்றிற்று.

---

உ

சிவமயம்.

சண்முகநாதன் துணை.

# வண்டோச்சிமருங்கணைதல்.

காரார்ந்த மேனிக் களிற்றினந் தாங்குந்தி கைக்கனைலா
நேரார்ந்த கீர்த்தியன் கட்டாரி நாகய நேசன்வெற்பிற்
சீரார்ந்த *கார்க்கண் டனுக்காம் † பணிவிடை செய்துவண்டே
ரோரார்ந்த வல்லியைப் போற்று திருப்பதி லென்பயனே. (க)

மொய்யலை வேலை வளைவுக்கு ளாக முழுதுநின்ற
தையலை யாளுந் துரைநாக யேந்திர சாமிவெற்பி
னையலை நீங்கு மளிகா ளுமது நடத்தைநன்று
மையலை நீரடைந் தும்வெறுத் தீர்மட மாதரையே. (உ)

படிதாங்கு பாயற் பிரானரு ளானெடும் பார்புரக்க
முடிதாங்குங் காமய நாகய மால்வெற்பின் மொய்யளிகாள்
வடிவாங் கருமுகி லேறிய தாலந்த வானிறையாந்
துடிதாங்கு விரெனி லீசனு மாமென்று சொல்லுவனே. (ங)

கொஞ்சிய வள்ளி மணவாள னுமுரு கோனையென்று
நெஞ்சினி லெண்ணித் துதிக்கின்ற நாகய நேசன்வெற்பில்
வஞ்சியை வஞ்சித் திருளூடு செல்லுதன் மாநளன்பாற்
கெஞ்சிப் படித்தது வோசொல்லு வீர்வரிக் கீதங்களே. (ச)

---

* கார்க்கண்டனுக்கு—மேகமாகிய குருரானுக்கு
† பணிவிடை—பின்பற்றி நிற்தல்.

அன்று கராவி னகல்வாயிற் சிக்கிய வாளைமுன்பு
சென்றுவக் தாண்ட துரைநாக யேந்திரன் றின்சிலம்பி
னன்றிது மேன்மை யடைந்தே கணக்கி னயமறிந்து
மொன்றினிற் பாதி தெரிந்திலிர் கேத்தி னெண்குலமே. (ரு)

பார்பாரி யாமென் றெடுத்துண் டுமிழ்ந்து பணைப்புயத்தி
லோர்பா லமைத்த துரைநாக யேந்திர னெண்சிலம்பிற்
கார்பாரி யாமென் றுறவாக்கிக் கொண்டு கரியவண்டீர்
சார்பான மன்னரை யேன்பகைத் தீரிது தக்கதன்றே. (சு)

நாகந் தனைக்குந்தி மைந்தர்தந் தேவிக்கு நல்கினனை
மாகந் தனைத்தொழுங் கட்டாரி நாகய மன்னன்வெற்பிற்
பாகந் தனைத்தரும் பாட்டின்வண் டீரென்ன பான்மையிது
மேகந் தனையடுத் துங்கண்டி லீர்செழு மின்னலையே. (எ)

அடுக்குந் களிஞர் தாம்பார்த்துச் செம்பொனை யள்ளியள்ளிக்
கொடுக்குந் துரையெங்க ளுநாகய மால்வரைக் கோலவண்டீர்
மடுக்குங் களாவலி னுனீவிர் சாரன் மழைக்குட்சென்று
னடுக்கம் பொருதுடனையுமெய் யாயிது ஞாயமன்றே. (அ)

வாரணி கொங்கை மடந்தையர்க் கோர்மதன் வாணருக்குத்
தாரணி தன்னில் வளர்தாரு நாகய சாமிவெற்பிற்
காரணி யைக்கண்டு கொண்டீர் மகிழ்ந்திரு காலெஞ்சிற்
பூரண மாக நினைத்தாலல் லோபயன் புள்ளினமே. (கூ)

சங்கிற் பொலிந்த கரதலத் தான்மந்தி தன்முன்வந்த
துங்கத் துரையெங்க ளுகய சாமி சுமுகன்வெற்பிற்
கொங்கிற் பொலிந்த நெடுங்கான் புகுந்தும் பிக்குலங்காள்
சிங்கத்தை நோம்படி செய்தி ருமது திறமைநன்றே. (௰)

சகமா னதையளந் தானினங் காக்கத் தனிக்குடையே
நகமாகக் கொண்டவன் கட்டாரி நாகய நாயன்வெற்பின்
மிகமா விராக மிசைக்கும்வண் டீருங்கன்மேன்மையென்னுஞ்
சுகமாகக் கூடலைக் கண்டுகண் டீரில்லை சொக்கரையே. (௰௧)

பாராய்ந்த பல்லுயிர்க் கெல்லாமெக் காலும் படியளக்குஞ்
சீராய்ந்த காமய நாகய ராசனற் றியாகிவெற்பிற்
றூராய்ந்த சோலை வரையினிற் போயங்குத் தங்கிநின்று
மாராய்ந்து கண்டிலிர் வண்டினங் காளவ் வழகரையே. (௰௨)

நடையா லரசு புரிநீதி யாற்குண நன்மையினாற்
கொடையாற் பெயர்பெற்ற நாகய மால்வரைக் கோலவண்டீ
ரிடையால் வரும்பழி மாதனப் பார மியற்றிவைத்த
வுடையாளிக் காங்குழல் சேராது நீவி ரொதுங்கிடிலே. (௰௩)

பூநாறுஞ் செய்ய கனிவாய்த் திருவைப் புயத்தில்வைத்த
மானு பரணனெங் நாகய பூபன் வரைச்சுரும்பீ
ரானுலு ஞாயமென் மாகாணி யுந்தெரி யாதவர்நீ
தானுசற் காரினில் வேலைபெற் றீர்வெகு சட்டமிதே. (௰௪)

துட்டரை வாளுக் கிரையாக்கி வானிற் றுரத்தியிங்கே
சிட்டரை யாளுந் துரைநாக யேந்திரன் றிண்சிலம்பி
லெட்டரை மாதிர முஞ்சென் றிராக மிசைக்கும் வண்டீர்
பட்டரை யேன்பகைத் திரய்யங் காரைப் பழக்கமுற்றே. (யரு)

இன்னுரைப் போலறி வாளியெங் காகினு மில்லையென்றே
பொன்னுடும் வாழ்த்திய கட்டாரி நாகய போசன்வெற்பிற்
பன்னுளும் வாழு மளிகாண் மதனன் பகைவருமென்
றுன்னுமை லேய்வன் வேழத்தி லேறிய துத்துங்கமே. (யசா)

கொடிக்கா வலர்வந் திறைஞ்சிய பாதன் கிளர்ந்த செய்பொன்
முடிக்கா மயனெங்கள் கட்டாரி நாகய மொய்ம்பன் வெற்பில்
வடிக்கானம் பாடு மதுகரங் காளின்று மைமயக்காற்
கொடிக்கா லிரண்டினை நாலாக்கி னீர்தொழிற் கூர்மைநன்றே.

எந்நேர முங்கவி வாணர்க்கும் வேதிய ரென்பவர்க்கும்
பொன்னே தருந்துரை கட்டாரி நாகய பூபன்வெற்பிற்
கன்னேர் மனத்தளி காணிவிர் தானனை காண்பதற்கு
முன்னே முதுமையை யுற்றீ ரெவருமை மோகிப்பரே.(யஅ)

நாலா கலையுந் தெரிந்தந ளுகய ராசனெனுங்
கோலா கலன்வரைப் பாங்கர்வண் டீர்குயின் மீதினுங்கள்
காலான் மிதிக்கக் கொடிதான் வருந்திய காரணத்தைப்
போலா மெவர்க்கு முயிர்த்தொந்த மானதிப் பூதலத்தே.(யக)

நிலைக்கோட்டு மால்களிற் றன்வெற்றி நீள்கொடி நீண்டசெம் [பொற்
சிலைக்கோட்டி லூன்றிய நாகய மால்வெற்பின் செவ்வியவேள்
விலைக்கோட்டு நாணளி காணிர் மழையை மிகவறிந்துங்
கலைக்கோட்டு மாத வரையேன் வருத்திய காரணமே. (உ௰)

எடுக்குஞ் சிலைவளைத் தொன்னார் முடியை யிடறவம்பு
தொடுக்கின்ற நாகய மான்மா திரச்சூரும் பீருடன்மீ
தடுக்குங் கறுப்பன்றி வேறே கறுப்பனு காதிருந்து
முடுக்கினைக் காண்பதற் குள்ளே தலைசுற்ற லுற்றதென்னே. ()

இருங்கே கயமுகைப் பானரு ளாலவ் வெழிலுவணப்
பருங்கே தனனெங்க ளுகய பாண்டியன் பாரவெற்பிற்
கருங்கே சவன்முடி மீதேறி னீர்திருக் கந்தனையு
மொருங்கே மதித்திலிர் மேலாம்வண் டீருங்க ளுத்துங்கமே()

முடங்குஞ் சிலைகொண் டரக்கிநன் போருக்கு முந்திமுந்தித்
துடங்குந் தவமுனி பின்சென்ற நாகய துங்கன்வெற்பி
லடங்குங் குழலினை யங்குழ லாக்கி யளியினங்காள்
மடங்கலை நீவிர் மடங்கல்செய் திரிதென் வல்லமையே (உ௩)

நவியாளி யோர்துறைக் குண்ணீ ரருந்திட நன்னெறியாற்
புவியாளுங் காமய நாகய ராசன் பொருப்பின்வண்டீர்
கவிகாள மேகந் தனைப்போ யடுத்துமிக் காசினியிற்
செவிதான நூலை விசாரித்தி லீருங்கள் செய்கைநன்றே (உச)

பைநாகத் தின்முடி கண்டாளைத் தாங்கிப் பவனியொரு
கைநாகத் தின்மிசை யுல்லாச மாவருங் காளையெங்கண்
மெய்நாக யேந்திரன் வெற்பின்வண்டீரென்ன விள்ளுவம்யாம்
மைநாகத் தின்முடி கண்டுகண் டீரில்லை மற்றதையே. (உரு)

முக்காலங் கண்ட பெரியோருஞ் செந்தமிழ் மூன்றுமுணர்
தக்கோரும் வாழ்த்திய நாகய மால்வரைச் சாரல்வண்டீ
ரக்காரைக் கண்டு பழகிய வாதர வாலல்லவா
விக்கா லரையு மதியாம னீங்க ளிருப்பதுவே. (உசு)

தாதுற்ற செய்யதண் டாமரைப் போதிற் றழைத்ததிரு
மாதுற்ற தின்புயன் கட்டாரி நாகய மன்னன்வெற்பிற்
கோதற்ற வண்மையி லேறிய தாற்குக னுவிர்வண்டீ
ரோதற் கரியவிடையேற்றஞ் செய்யி னுமாபதியே. (உஎ)

பனிதுன்னு மால்வரைக் கோர்மக வாய்வந்த பார்ப்பதிவாய்க்
கனியுண்ணு மீச னடிபோற்று நாகய காமன்வெற்பி
லினிதுன்னை வேண்டி யெழிற்றும்பி காள்பிடி யேங்கியிங்கே
தனிநின்று நைய விருட்கான் புகுந்த தகைமைநன்றே. (உஅ)

அண்டின பேர்களை முற்றிலுங் காக்கு மதிபதியாக்
தண்டிகை வேந்தன் செயநாக யேந்திர சாமிவெற்பின்
வண்டினங் காண்மது பானத்தின்மேன்மனம்வைத்தவர்மாட்
டுண்டுகொ லோநடு ஞாயத்தைக்காண்கின்ற வொண்ணறிவே.

மெல்லியல் சீதை மணத்தினை வேண்டி மிதிலையிற்போய்
வில்லிற வாங்கிய கட்டாரி நாகய வேந்தன்வெற்பிற்
சொல்லிய வல்லிக் கிடையூறு செய்யத் துணிந்துவண்டீ
ரெல்லையில் லாக்கரு மஞ்சார்ந்து நிற்ப தியல்பல்லவே. (௩௰)

எல்லா வுயிர்க்கு முயிராகி நிற்கு மிறைவனைத்தன்
வில்லா லடித்த துரைநாக யேந்திரன் வெற்பின்வண்டீர்
சொல்லார்ந் திருக்கின்ற செல்வரை நீவிர் தொடர்ந்தடுத்தி
ரில்லா தவரை யுடன்பகைத் திரளி யிர்களன்றே. (௩௧)

சுந்தர மூர்த்தியை மாதாபி தாவைநற் றொல்குருவைச்
சிந்தையி லேத்திய நாகய ராசன் சிலம்பின்வண்டீர்
விந்தைய தாவிது மின்னுரை மஞ்ச மிசையடுத்து
வந்திருந் தேமத்தி யானநல் வேளை வருத்துவதே. (௩௨)

மீறிய செம்பொன் படைத்தோன் றமிழைத்தென் வெற்ப
தேறிய காமய நாகய ராசன் சிலம்பின்வண்டீர் [னெனத்
கூறிய காவிற்சென்றேறுகின் றீர்கொழு கொம்பெனநின்
றேறிய வல்லிக் கொடிதான் கயங்குமென் றெண்ணமற்றே. ()

இருமா நிலத்தொடு மேல்கீ ழுலகு மிசைந்தபொறைத்
தருமாவென் றேத்திய கட்டாரி நாகய சாமிவெற்பிற்
திருமாலை நீவி ருறவுகொண் டீரிந்தச் செய்கையினல்
வருமார வேள்பகை யானதின் றேசிறை வண்டினமே (௩௪)

மஞ்சாரும் பூம்பொழில் சூழ்மரு தூருக்கு மன்னன்விவே
கஞ்சார்ந்த காமய நாகய ராசகம் பீரன்வெற்பிற்
பஞ்சா னனங்கண்டி லீர்வண்டு காளப் படியிருந்து
மஞ்சா ருமைமையை யுறவாக்கி நின்றதென் னுதரவே. (௬௫)

தருதாரு வுக்கு முகிலுக்கு நாணந் தருகொடையான்
மருதூர் புரக்குந் துரைநாக யேந்திரன் வாய்ந்தவெற்பி
லரிதா மிசையளி காளிருட் போதிற்கள் ளூக்குடித்து
விருதாவி லேபிழை செய்துவிட் டீரொரு மின்கொடிக்கே. ()

தந்தா வளமும் வளநாடுங் கற்றூர் தமக்குதவுஞ்
சிந்தா மணியெங்க ளுநகய பூபன் சிலம்பின்வண்டீர்
நந்தா வனந்தனிற் பள்ளிகொண் டீரிது நன்றிதுபோல்
வந்தே யொருவரை யுந்தாங்கி னுலுமை மாலென்பரே. (௬௭)

கன்றே குறுந்தடி யாக்கொண்டு வீசிக் கனியுகுத்து
நின்றே மகிழ்ந்திடு நாகய மால்வெற்பி னிலவண்டீர்
நன்றே புரிந்திடுங் காமய மாலே நயந்துகண்டு
மின்றேறநற் றுளிணை போற்று திருப்பதி லென்பயனே. (௬௮)

மருவாயென் றேமுன் வருசூர்ப் பநகை வரைதனமுக்
கொருவாளி யாலரிந் தோனெங்க ளுநகய யோகன்வெற்பிற்
கருவாய்ச் சிறையறு காற்றும்பி காணல்ல காரியமா
திருவானைக் காவை யிருகூறு தள்ளித் தெரிசிப்பதே. (௬௯)

ஈன்ற பிதாமுன்பு செய்தா னருந்தவ மென்பதற்கோர்
சான்றெனத் தோன்றிய கட்டாரி நாகய சாமிவெற்பிற்
றேன்றர லாலிவ் வணங்கானை நட்புச்செய் திர்வணங்கு
வான்றனை முற்றப் பகைத்திர் நெறியன்று வண்டினமே. (சய)

இரும்பைப் பணியனை யானடிப் போதையெப் போதுமன்பாய்
விரும்பித் துதிக்குந் துரைநாக யேந்திரன் வெற்பின்வண்டீர்
கரும்பைக் குனித்துமுத் தேவர்கண்மீதுங் கணைதொடுப்பீர்
துரும்பைப் பகைப்பதி லென்னகு முங்களுத் துங்கங்களே.()

புகுகின்ற போரிற் சுயோதன ளுவிப் புலமெதிரிக்
கிகுதென்று காட்டிய நாகய மால்வரை யின்சுரும்பீர்
மிகுமஞ்சின் மேலறு காலிணைச் சேர்க்கும் விதந்தெரிந்துந்
தகுநா லரையிரண் டாமென்று பார்க்கத் தரமில்லையே. (சஉ)

எம்மையுங் காத்து நிரைகாத்துக் குந்தி யெழிற்புதல்வர்
தம்மையுங் காத்த துரைநாக யேந்திர சாமிவெற்பிற்
செம்மைய தாகிய வய்யரை யேபகை செய்துவண்டீ
ரம்மையை நீவி ருறவாக்கிக் கொண்ட ததிசெயமே. (சங)

பருங்குங் குமக்கொங்கை யாருக்கு மோகம் பகலிரவாய்த்
தருங்கற்ப தாரு துரைநாக யேந்திர சாமி வெற்பி
னெருங்குங்குழற்குனைத்தன்மையென்றேர்ந்ததை நேசமுற்று
மருங்குற்கொடியதென்றே வெறுத்திர்சொல்லும்வண்டினமே

கந்தரம் பூங்கமு கம்போன்ற குஞ்சரக் கன்னிமெய்க்குங்
கந்தாம் போருகத் தாள்போற்று நாகய காமன்வெற்பிற்
கந்தரந் தன்னை யடுத்திர்வண் டீர்முதிர் கானஞ்செய்யக்
கந்தாம் பார்த்திலி ரந்தோ விதுவென்ன காரியமே. (சரு)

மருந்தா மெனச்சமைத் தந்நாள் விதுரன் மனையிலிட்ட
விருந்தாங் கருந்திய நாகய மால்வெற்பின் மின்குழல்வா
யருந்தா துகக்கு மளிகா ளிராவணை ராயிருந்தும்
பொருந்தாத தென்ன துடியி ததிக புதுமைநன்றே. (சசா)

ஆதவன் றன்னைநன் னேமியி னன்மறைத் தன்றுநின்ற
சீதரன் காமய நாகய பூபதி திண்சிலம்பிற்
பேதமில் லாதுபண் பாடும்வண் டீருங்கள் பெற்றிநன்று
மோதிமஞ் சாரநட் பானீர் கொடியி னுறவைவிட்டே. (சஎ)

மஞ்சார் கடற்புவி மீதுகற் றோர்களை வாழ்விக்கவோர்
சஞ்சீவி யாய்வந்த நாகய மால்வரைச் சார்பின்வண்டீர்
நெஞ்சார வஞ்சி மயக்கத்தை நீர்வந்து நீக்குமென்ன
வஞ்சோலை விட்டும் வாதிருந் திருங்க ளன்புநன்றே. (சஅ)

சதுரா சலப்பொருளைப்போற்றும் புண்ணியத் தாற்றழைத்த
திருவாமென் றேயர சாள்கின்ற நாயக வேந்தல்வெற்பின்
மதுவாசை கொண்டு நிசிசா ராகிவண் டீர்மிகவும்
பதிவான வான வரையே னிமிசைப் படவைப்பதே. (சகூ)

காமாட்சி யைக்கொண் டிலக்கணம் வாசித்த நற்புலவோர்
பாமாட்சி யைக்கண் டுவக்கின்ற நாகய பாண்டியன்வெற்பிற்
பூமாட்சி யைக்கண் டிசைபாடி யாடும் பொறிவண்டுகாள்
காமாட்சி யைக்கண்டு மீனாட்சி மின்னைக் கழித்ததென்னே.()

தருத்தங்கு நாட்டுக் கரசா யிருந்ததைத் தள்ளியிந்த
வுருத்தங்கி மாநிலங் காக்கின்ற நாகய யோகன்வெற்பின்
மருத்தங்கும் வாயளி காள்வெள்ளெழுத்தின்று வந்ததுவோ
திருத்தங்கன் மேவியுங் காணீரங் குள்ள சிறுவரையே. (௫௧)

கவியெனுந் தேவ ரமுதத்தை வாரியெக் காலமுந்தன்
செவியெனும் வாய்கொண் டருந்திய நாகய தீரன்வெற்பி
லவிர்முலை யார்வச முள்ளவல் வான்மிசை யாசைவண்டீர்
சவுதலை நீக்கி முகதலை மேல்வைத்த தன்மைநன்றே. (௫௨)

பங்கே ருகத்தைக் கொடையாற் சினந்து பழித்தகையிற்
சங்கேந்து காமய நாகய மால்வரைச் சார்பின்வண்டீ
ரிங்கே யிருக்கும் வெளிச்சத்தை நீர்கண் டிருந்துபின்னு
மங்கே யிருட்டினிற் சஞ்சாரஞ் செய்வ தறிவின்மையே.(௫௩)

புலவா வெனக்கற்ற வாணரு மாதரும் போற்றுகின்ற
பலவா னெனுமெங்க ணாகய மால்வரைப் பாங்கர்வண்டீர்
நலதா மரையிற் பிரியம்வைக் காம னறையருந்த
நிலவாத காக்கணம் பூவே விரும்புத னேர்மையன்றே. (௫௪)

எல்லாரு மெல்லாப் பவுசுமுற் றோங்கி யிருப்பரென்று
வல்லார் புகழ்மரு தூர்நாக யேந்த்ரன் வரைச்சுரும்பீ
நல்லாச மாகக் களவாச் செயுஞ்சிந்தை யொன்றைவிட்டுக்
கல்லாவின் கீழுரை யேநினைந் தாலுண்டு காரியமே. (௫௫)

பூனே பொறையுந் தருமமுந் தானென்று பூண்டசிம்ம
வானே நிகர்க்கின்ற நாகய பூப னசலவண்டீர்
கானே நெருவஞ்சி மேல்வெறுப் பாகியென் கண்ணெதிரே
வீனே யறவிடை வீழ்ந்தது போலொரு வேடிக்கையே. (௫௬)

முப்போதும் பூசையின் மார்க்கண்ட னுமென்று மூன்றுலகு
மொப்போதுங் காமய நாகய பூபதி யோங்கல்வண்டீ
ரெப்போது முங்கட் குறவான பூங்கொடி யின்மைகண்டு
மிப்போது பொங்க விடமனம் பூரித் திருந்ததென்னே. (௫௭)

ஆகன கம்பணி வத்திரந் தாரணி யன்னநர
வாகனம் வானர்க் கருணாக யேந்திரன் மால்வரையின்
மோகன ராக முதலா மிராக முழக்கும்வண்டீர்
பாகலே வேண்டி யவரையின் மேல்வெறுப் பானதென்னே. ()

அரவினி லாடுந் திருமான் முளரி யடியிணையைப்
பரவிய செங்கையன் கட்டாரி நாகய பாண்ட்யன்வெற்பில்
விரவிய மாதனஞ் சேர்கன வாளே வெறுத்தளிகா
ளிரவலர் தம்மை யடுத்திருந் தீரிதி லென்பயனே. (௫௯)

நிதியா லுயர்ந்து நதியால் வளம்பெறு நீண்மருதூர்ப்
பதியாளுங் காமய நாகய மால்வரைப் பாங்கர்வண்டீ
ரதிகார மேன்மையை யுற்றிருந் தாலு மழகிதல்ல
மதியா தரசுக்கு மேலா னவரையும் வாதிப்பதே. (௬௰)

வண்ணூர்ந்த செய்ய மலர்ப்பதத் தாற்கல் வடிவையொரு
பெண்ணாகச் செய்தரு ளாகய ராசன் பெருஞ்சிலம்பிற்
பண்ணார் மதுகரங் காள்பூ வடங்கலும் பார்த்துவண்டீர்
விண்ணாடி னுமக் குண்டாகும் புண்ணிய மெத்தவுமே.(௬௧)

பண்ணையு மேன்மையும் ராசாங்க யோகமும் பல்கிவரும்
புண்ணிய வானெங்கள் கட்டாரி நாகய பூபன்வெற்பிற்
றண்ணளி காளென்ன நல்லுத்தி யோகந் தனைவெறுத்தே
யெண்ணமில் லாமலித் தண்டலை மேற்கொண் டிருந்ததுவே.()

பூமுக மாகப் புகழ்மரு தூரைப் புரப்பதுவே
நேமக மாகிய நாகய மால்வரை நீலவண்டீர்
நாமுக வோமிந்தக் காயத்தை யேயென்று ஞானமுற்றுங்
காமுக ராய்த்திரி கின்றீ ரிதிலென்ன காரியமே. (௬௩)

தவளப் பிறையுங் கடுக்கையுஞ் சூடுஞ் சடாதரனைச்
சிவனைப் பரவிய கட்டாரி நாகய தீரன்வெற்பி
னுவறற் கரிய சுரும்பினங் காளிது நுண்ணறிவா
லவனிற் பிரியமுற் றேவெறுத் திர்தெளி வானதையே. (௬௪)

விதுகுறிப் பாகப் புனைவோற் பணிவதின் மேன்மையுண்டென்
பதுகுறித் தேதொழு நாகய மால்வரைப் பாங்கர்வண்டே
ரெதுகுறித் தோவக் கரையாக நீர்கப்ப லேறிநின்றி
ரிதுகுறிப் பாய்ச்சொலுங் காண்பதெப் போதினி லிக்கரையே.

பெரியார் பழக்கமுந் தானமும் பூசையும் பேதமின்றிச்
சரியாகச் செய்யுந் துரைநாக யேந்திர சாமிவெற்பில்
வரியார் பிரமரங் காணிவி ராமை வடிவுகண்டே
ரரிதா நரசிங்க ரூபமும் பார்க்கினன் றுமுமக்கே. (௬௬)

சொக்கா மதுரைத் துரையேயென் றுதிச் சுடர்க்கொழுந்தை
முக்காலும் வாழ்த்திய நாகய மால்வரை மொய்யளிகா
ளக்கா வடிகளை யுண்டாகச் செய்துகொண் டாடுதல்விட்
டெக்கால முந்திருக் கந்தனை யேமனத் தெண்ணனன்றே. (௬௭)

நேயத்திற் புத்தியி னீகையி லோகையி னீண்டசம்ப்ர
தாயத்தில் வித்தையிற் கீர்த்தியில் வார்த்தை தனிற்சதுரு
பாயத்தின் மேன்மை தருநா கயன்வரைப் பாங்கர்வண்டீர்
சியத்தைப் பார்க்கின்மை மேன்மையென் றேநட்புச்
செய்ததுவே. (௬௮)

காசினி வேந்தரி லெவ்வகை யாலுங் கதித்துமகா
பூசிதம் பெற்ற துரைநாக யேந்திர பூபன்வெற்பி
லாசுக மெய்த லறியா திருக்கு மளியினங்கா
டேசுறு கார்முகக் கொண்டீர் பயனென் றெரிந்திலனே. (௬௯)

வாக்கினி லேயரிச் சந்திரன் யாரையும் வாழ்விப்பதிற்
றாக்கணங் கார்ந்த புயநாக யேந்திர சாமிவெற்பின்
மாக்களின் மேல்விருப் பானவன் டீர்நல்ல மார்க்கமிது
காக்கையைக் காணிற் பிடியா திருப்பது கற்றவர்க்கே. (எ௰)

நாடிப் பகவன் மலர்த்தாள் பணிந்தொரு நான்கிலக்கங்
கோடிப் பணம்பெறு நாகய மால்வரைக் கோலவண்டீர்
பாடிப் படிக்கத் தலைமையுற் றிருயர் பாவலர்தான்
றேடிப் படிக்குநன் னூலறி யாதது தேர்ச்சியன்றே. (எக)

மலைக்காமற் கும்ப முனிவனைப் போலு மருவுமெண்ணொண்
கலைக்யான முங்கற்ற கட்டாரி நாகய காமன்வெற்பில்
விலைக்காயு நன்னுதல் வஞ்சியின் மேல்வெறுப் பாகியுமோர்
தலைக்காமஞ் சார்ந்துநிற் கின்றதென் னேசஞ் சரிகங்களே. ()

காலையு மாலையு மேலான நூல்களைக் கற்பதுவே
வேலைய தாகிய கட்டாரி நாகய வேந்தன்வெற்பின்
மாலையந் தாதி முழுவதும் பார்த்து மகிழும்வண்டீர்
சீலம தாயங் குறவஞ்சி பார்த்திடிற் றேர்ச்சியுண்டே. (எ௩)

உமையோங்கு பாகத் துறைகின்ற நாதனை யுன்னுமன்பர்
தமையாங்கு நட்புச் செயுநாக யேந்திர சாமிவெற்பி
லமைதாங்கு தோளி குழலைவிட் டேகு மடர்ந்தகொங்கைச்
சுமைதாங்கி நையு மிடைதாங்கி டாது சுரும்பினமே. (எச)

குவ்வாழும் வேந்தர்க் காசாட்சி செய்யக் குறித்தநன் னா
ளிவ்வாறென் றோதிய நாகய மால்வரை யின்சுரும்பீர்
செவ்வாய்க் கனநய தேசிக மார்க்கந் தெரிந்திசைத்தி
ரவ்வாறு கண்டொரு நூறுவண் டாட லறிந்திலிரே. (௭௫)

பூமா துலவும் புகழ்மரு தூரைப் புரக்குமெங்கள்
சீமா னெனுந்துரை நாகய தீரன் சிலம்பரிகா
ளாமாநற் சேர்க்கையின் வாசமென் றோதிய வம்மொழிபோற்
காமாரி சேர்க்கையிற் காமாரி யானதைக் கண்டனமே (௭௬)

குலவிய வேந்தர்க்கு மேலாந் தமது குலத்தினுக்குந்
திலகம தாய்வருங் கட்டாரி நாகய தீரன்வெற்பி
னலமுற வோதி புணர்ந்திட வேண்டு நளினவண்டீர்
பலகலை யாய்ந்த வரையோர்க் கடுப்பது பண்புநன்றே. (௭௭)

கரமாறெ டாறு மிரு நான்கு முற்றவன் கஞ்சிதறச்
சரமாரி யேவிய நாகய மால்வரைச் சார்பின்வண்டீர்
வரமாரி ராகவ ராகிநின் றீர்கள் வனம்புகுந்துந்
திரமாக வந்தன் றனக்கிடர் காட்டியுந் தீர்க்கநன்றே. (௭௮)

பாகார் மொழிச்சியர்மாலென்று மாலொன்றிப்பார்க்கும்வச்ர
தேகாலங் கார மிகுநாக யேந்திரன் றிண்சிலம்பி
லாகா மருவ லரைப்போ யடுத்துநின் றூர்த்துவண்டீர்
வாகாக வுற்ற வரையேன் மதித்திலிர் வண்மையன்றே (௭௯)

பண்டுகல் லானைக்கு வேழத்தை யீந்த பழம்பொருளை
விண்டுகொண் டாடிய கட்டாரி நாகய வேந்தன்வெற்பின்
வண்டுக ளேயொரு நல்வேளை நோக்கிவன் காவலரைக்
கண்டுகும் பிட்டுநின் றாலல்ல வாவுண்டு காரியமே. (௮௰)

போரா லுயர்ந்த புயநாக யேந்திரன் பொங்கர்வண்டே
யாராலுஞ் சொல்லத் தகாதகண் காட்சியந் தத்தின்மிசை
யோரா லிரண்டத்தி லேயிரண் டோர்கமு குற்றதல்லாற்
காரார்ந்த மற்றொரு சோலையி னீவிருங் கண்ணுற்றதே. (௮௧)

ஈரங்க மாணொன்று பெண்ணொன்று மாகி யிருந்ததொன்றி
யோரங்க மான வனைப்போற்று நாகய யோகன்வெற்பி
னீரங்க மாகிய காவிரி வாய்ந்துநின் றாடிவண்டீர்
சீரங்க மாத வரையே நினைத்திவிர் செப்புமின்னே. (௮௨)

கீர்த்தியுஞ் செல்வமுந் தாராள மாகக் கெழுமிவரும்
பார்த்திப னாமெங்க ணாகய மால்வரைப் பாங்கர்வண்டீர்
கார்த்திகைக் கேகிப் பரங்குன்றின் கீழ்வளர் கந்தனையே
பூர்த்திய தாய்த்தரி சித்தீ ரிலையுங்கள் புத்திநன்றே. (௮௩)

தாவிநன் மாதவஞ் செய்தே மிருகண்டு தந்தசிரஞ்
சீவியி னான்றனை யொப்பான நாகய தீரன்வெற்பிற்
றேவியொ டாடுஞ் சுரும்பீ ரருத்தந் தெரிந்தல்லவா
தாவியந் தாங்கி வரலாம் படிக்கவெக் காலத்துமே. (௮௪)

அலையார் பரவை கலங்கிநின் றாலு மணுத்துணையு
மலையாத சிந்தைய னாகய மால்வரை வாய்ச்சுரும்பீர்
நலமா மெழுந்த முழுநீல மாமலை நாடல்விட்டுக்
கலையாற் பொதிய வரையினை நாடுதல் கற்றவர்க்கே. (அரு)

பரிதான மாப்பொன் முதலாத் தருவதிற் பைந்தருவோ
சரிதா னெனத்தருங் கட்டாரி நாகய சாமிவெற்பி
லரிதான தந்தம் பலவின மான தறிந்தும்வண்டீர்
பெரிதான தேன்குழன் மேலாசை கொண்டது பேதமையே.

சிங்கா சனந்தனி லிந்திரன் போலத் தினமிருக்கு
மெங்கோன் புகழ்ப்பெருங் கட்டாரி நாகய வேந்தல்வெற்பிற்
றங்கானம் பாடு மளிகாண் மயக்கந் தனைவருத்த
வங்காப் புடையவ ராகிநின் றீர்கள் ளருந்துதற்கே. (அஎ)

அங்கான கண்டனை மான்மழு வானை யறத்தின்மங்கை
பங்கான னைப்பணி நாகய மால்வரைப் பாங்கினன்றா
மங்காச் சுரும்பினங் காளிரு காலும் வருந்தச்சென்று
கங்கா னதிவிருப் பத்துட னாடிக் களிப்புற்றதே. (அஅ)

உழைக்காளின் மேவிய பாரத்து வாசரென் றோதுமுனிக்
கழைக்கா விருந்தினன் கட்டாரி நாகய வண்ணல்வெற்பிற்
றழைக்காத மின்னல் வெளிச்சத்தி னாகா வாற்றகுந்த
மழைக்காலிருட்டினிற் சென்றீர்வண் டீர்நல்லமார்க்கமன்றே.

தனஞ்சார்ந்து புத்திர சந்தானஞ் சார்ந்து தகுந்தரவிற்
பனஞ்சார்ந்த காமய நாகய மால்வரைப் பாங்கர்வண்டி
ரினஞ்சார்ந்த நூலின் றிறமையில் லாம லிருந்துமிங்கே
கனஞ்சார்ந் தவருங் களைப்போது மில்லையிக் காசினிக்கே. (

பெடையொடு கூடிக் குலாவிச்சந் தோடம் பெருகியதாற்
றடையேது மின்றிச் சிறைவிரித் தாடிய தண்ணளிகாள்
விடையோ னருள்பெற்ற நாகய பாண்டியன் வெற்பின்மதன்
படைவீடு சோதிப்ப தென்னோ வவன்றன் பகையெய்தவே.

சூலாய் நிறைந்த வெழிலிகற் றூறை சொரிந்திடுதல்
போலாய்ந் தவர்க்கு நிதிதரு நாகயன் பொங்கர்வண்டீர்
மேலாம் புலமையுற் றீரே யிடையின மெல்லினமப்
பாலானவல்லின முந்தெரி யாதநம்பான்மையென்னே. (௧௨)

பெய்யுறை நீக்கி மருவார்க ளைஞ்சினைப் பீறிவடுச்
செய்யுர வேற்கையன் கட்டாரி நாகய தீரன்வெற்பிற்
பொய்யுரை யேயொரு சார்பாக நம்பிப் பொறிவண்டுகாண்
மெய்யுற வேநன்மை யுற்றீ ருறுபவர் வேறெவரே. (௧௩)

கொங்கார் மலர்த்தடஞ் சூழ்மரு தூரினன் கொங்கர்வங்கர்
வங்காளர் வாழ்த்திய நாக்ய மால்வரை வாய்ச்சுரும்பீ
ரங்காரைப் போயடுத் தானது மிங்குள் ளவரைவருந்
துங்கா ரணஞ்செய்ய வெண்ணிச்சென் றீர்பழி சூழுமின்றே.

ஏகாக் கரத்தொடு பஞ்சாக் கரங்களெட் டக்கரமும்
பாகாய்த் துதிக்கின்ற நாகய மால்வரைப் பாங்கர்வண்டீர்
வாகாய்க் கருமண லைத்தான் றிரித்தது மற்றுமிந்த
வாகாயந் தன்னைவிற் போலே வளைத்தது மற்புதமே. (௧௫)

விம்மா ரமிட்ட புயநாக யேந்திரன் வெற்பின்வண்டீ
ரம்மாகத் தானந் தனிலே விருப்பமுண் டானவருக்
கிம்மா நிலத்தினி லிம்மையி லேற்றமுண் டெவ்வகையாற்
சும்மா கிடைத்தது சற்றே நமக்கிது சொல்லுங்களே. (௧௬)

இதுவா கொடுக்குந் தகைமையென் றேவள்ள லென்பவர்க்கும்
பொதுவாய்க் கொடைபயிற் றுங்கர நாகய பூபன்வெற்பின்
மதுவாற் சிறுமையுற் றிரிதைப் பார்க்கிலும் வண்டினங்காள்
பதிவான வஞ்சிக் கொடிபோன் றவரைநட் பாக்கனன்றே. ()

கையார் களிற்றின் பிடரியின் மேற்கவி கைநிழலி
லொய்யார மாவரு நாகய பூபதி யோங்கல்வண்டீர்
மெய்யாய் விளையு மிடையூறென் கின்ற விதந்தெரிந்து
மையாருங் கண்ணி மயக்கத்தில் வீழ்ந்த வகையென்னையே.()

ஆலினிற் கோலினிற் பள்ளிகொண்டானுக் கடிமைசெய்வோர்
பாலினிற் பட்ச மகலாத நாகய பாண்டியன்வெற்பி
னூலினிற் பாதியிற் பாதியிற் பாதி நடுங்கவுறு
காலினிற் சென்னியைக் கண்டீர்வண் டீரிது காரணமே. (௧௯)

தேதிவிட் டேதிறை தந்தாரைத் தண்டிக்குந் திண்டிறலான்
பூதியிட் டானைப் புகழ்நாக யேந்திரன் பொங்கர்மின்னூர்
தூதுவிட் டேகத் தகுந்தவண் டீரிடைச் சோர்வையெடுத்
தோதிவிட்டேன்செழுஞ்சோலையிற் சேருங்க ளோதிவிட்டே.

வாழி.

வாழியெந் நாளுநா ணிக்கண் புதைக்க வருந்துதுரை
வாழிவண் டோச்சி மருங்கணை கோவைய மாமருதூர்
வாழிம னுகைய வேளிர்த நூலை வழுத்தியவர்
வாழி யரங்கேற் றியர்கேட் டவரும் வழிவழியே.

ஸ்ரீ சதுரகிரி மஹாலிங்கேசர்
திருவடிகளே சரணம்.

வண்டோச்சி மருங்கணைதல்பற்றிய
ஒருதுறைக்கோவை
முற்றிற்று.



# பிழை திருத்தம்.

---

## பூதரவிலாசத்தில்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 49 | 1 | வடிவுககும் | வடிவுக்கும் |
| 88 | 1 | கலைவி | கலவி |
| 94 | | ௯௪ | ௯௪ |
| 55 | 4 | யென்றெவருக் | யென்றெவருஞ் |

## நாணிக்கண்புதைக்க வருந்தற்றுறையில்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 11 | 9 | குன்னைபல் | குன்னையல் |
| 13 | 13 | மூரசம் | முரசம் |
| 15 | 1 | வரூந்தல் | வருந்தல் |
| 20 | 3 | ருல்ல்ல | ருலல்ல |
| 21 | 1 | வரூந்தல் | வருந்தல் |

## வண்டோச்சிமருங்கணைதற்றுறையில்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 19 | யாதவர் நீ | யாதவர் நீர் |

---